PONDS




பொன் நகைகள்
மின்னிட... சந்தன
நறுமணம் கமழ்ந்திட...

இனிய உணர்வுகள் மனதில் மலர்ந்திடும் கணங்கள். உங்கள் மேனியில் பொன் நகைகள் மின்னிட, தூய சந்தனத்தின் நறுமணம் கமழ்ந்திட இதுவரை அனுபவித்தறியா உணர்வுகளால் உள்ளம் பூரிக்கிறது; பெண்மை உங்களிடம் பூரண பொலிவு பெறுகிறது.

அரிய நறுமணம்.
மதிப்பில் பொன்னைப்
போல் உயர்ந்தது.

பாண்ட்ஸ்
சாண்டல்
டால்க்

HTA 7023

# எதிரொலிக்கு எழுதியதும் எழுதாமல் விட்டதும்



● சென்ற வாரம் இசையரங்கம் நிகழ்ச்சியில் இடம் பெற்ற திருமதி செண்பகவல்லி சேதுராமன் அவர்களின் கச்சேரி, ஹாலில் உட்கார்ந்து கொண்டு டீ. வி. பார்த்துக் கொண்டிருந்த எங்களை இந்தண்டை, அந்தண்டை அரை இஞ்ச் கூட நகராமல், அப்படியே உட்காரச் செய்துவிட்டது.

— லதா ராஜேஷ், நந்தனம்.

(நான் கச்சேரி பார்த்துக் கொண்டிருக்கும் போது எங்கள் வீட்டுக் குட்டிப்பிசாசு என் மடியில் தூங்கிக் கொண்டிருந்தது. கச்சேரியின் கொடுமை தாங்காமல் எழுந்து போய் அணைக்கலாமென்றால் கூட முடியவில்லை. நகர்ந்தால் பிசாசு முழித்துக் கொண்டு அலறும்! அதை சமாதானப்படுத்துவது அத்தனை சுலபமில்லையே!)

● சென்ற மனைமாட்சி நிகழ்ச்சியில், குமாரி சரளா சுப்ரமணியம் சொல்லிக் கொடுத்த வெங்காய குல்ஷா, பருப்பு பிஸ்பு என்கிற இரண்டு புது சமையல் குறிப்புகளையும் இந்த வாரம் ஞாயிற்றுக்கிழமை டிபனுக்குச் செய்து கொடுத்தேன். என் மாமியார் உட்பட அனைவரும் என்னை மிகவும் பாராட்டினார்கள்.

— இந்திரா, தி. நகர்.

(நான் ஒரு காரியம் செய்து, அது நன்றாக இல்லை என்று சொல்கிற துணிச்சல் எங்கள் வீட்டில் யாருக்காவது இருக்கிறதா என்ன?)

● நடன அரங்கம் நிகழ்ச்சியில் நடனம் ஆடிய மிஸ் குந்தளா வைத்தியின் நிகழ்ச்சியைப் போல அடிக்கடி நடன நிகழ்ச்சிகளை ஒளிபரப்பும்படி நான் டீ. வி. யைக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

— உஷா, சென்னை — 95.

(எங்கள் வீட்டின் கீழ் போர்ஷன்காரர்களுக்கு, என் அம்மா மாவரைத்தால் போதும். உடனே சண்டைக்கு வந்து விடுவார்கள். டீ.வி. நடன அரங்கத்தில் அந்தப் 'பெண் தை... தை... தாம்... தூம் என்று குதித்த சப்தத்தில் அம்மிக் கல்லுரல் சத்தம் அடிபட்டுப் போய்விட்டதே!)

● டீ. வி. யில் செய்தி வாசிக்கும் ரமண மேகன் தினமும் செய்தி படிக்க வரமாட்டாரா என்று நினைக்கிறோம், அந்த மாதிரி ஒரு பர்சனாலிடி!

— சந்தியா சந்திரன், குரோம்பேட்டை.

(பின்னே என்ன? தாடியும், மீசையுமான அவரது உருவத்தைக் காட்டி, "பூச்சிகாரன் கிட்டே சொல்லட்டுமா?" என்றால்தான் இப்போதெல்லாம் எங்கள் வீட்டுக் கடைகுட்டி ஒழுங்காய், அடம் பிடிக்காமல் சாப்பிடுகிறான். என்ன செய்ய?)

தொகுப்பு: மௌஷ்மி

# பத்திரிகை ஆசிரியர்!

◆ ஒருவர்: என்னவோய்! பத்திரிகை ஆசிரியருக்கு உம்ம பெண்ணைத் திருமணம் செய்து கொடுக்க மாட்டேன் என்று சொல்லிட்டீராமே?

மற்றவர்: பெண்ணைப் பார்த்தவர் இலவச இணைப்பாக அவளது தங்கையையும் கேட்கிறாரே!

டி. செல்வன், நெல்லையப்பபுரம்.

◆ அரைபிளேடு அருணாசலம்: என்ன ஆசிரியர் சார்! உன்னைப் பார்த்து ரொம்ப நாளாச்சே! இப்பல்லாம் அரசியல் ஜோக்ஸ் போடுறதை விட்டுட்டியா?

முத்துராஜா, பம்பாய் — 70

◆ துணை ஆசிரியர்: தலைப்புச் செய்தியாகப் பேப்பரிலே போடறதுக்கு, பஞ்சாப் பிரச்சனையிருக்கு; இலங்கைப் பிரச்சனையிருக்கு; பீரங்கி ஊழல் பிரச்சனையிருக்கு. இதிலே எதைப் போடலாம் சார்?

ஆசிரியர்: ஏய்யா! இதெல்லாம் ஒரு செய்தியா? இப்பத்தான் எனக்குத் தகவல் வந்திருக்கு, குட்டி நடிகை பானுஸ்ரீ வயசுக்கு வந்தாச்சுன்னு! அதைப் போடுய்யா தலைப்புச் செய்தியா!

ஜி. கண்ணன், மதுரை — 1.

◆ வாசகர்: உங்க பத்திரிகையில கவர்ச்சிப் படங்களும், ஆபாசக் கேள்வி பதிலும் வருதே, இதைக் குறைச்சுக்க மாட்டீங்களா?

பத்திரிகை ஆசிரியர்: ஐயய்யோ, இது குடும்பப் பத்திரிக்கைங்க!

டி. கல்யாணி, உம்பளச்சேரி

◆ முதலாமவர்: பத்திரிகை ஆசிரியர் மகனுக்கு என் மகளை வரதட்சணையில்லாமல் கட்டிக் கொடுத்தது தப்பாப் போச்சு!

இரண்டாமவர்: ஏன் என்ன ஆச்சு?

முதலாமவர்: வரதட்சணைக்குப் பதில், அவரது பத்திரிக்கைக்கு நூறு ஆயுள் சந்தாதாரர்களைச் சேர்த்துக் கொடுக்கச் சொல்றார்!

கரந்தை து. சுவாமிநாதன், தஞ்சை—1.

◆ பத்திரிகை முதலாளி: என்ன சார், எந்த வருடமும் இல்லாமல் இந்த வருடம் எஸ்.எஸ்.எல்.ஸி. தேர்வில் பத்தாவது இடத்தைப் பெற்ற மாணவிக்குப் பத்திரிகையின் சார்பாக ரூ.2,500/— பரிசு கொடுக்கிறீர்கள்?

பத்திரிகை ஆசிரியர்: அது என்னோட பொண்ணு சார்!

சாஹுல்ஹமீது, நாகூர் — 2.

◆ ஒருவர்: அந்தப் பத்திரிகை ஆசிரியரை ஏன் சார் கண்டிச்சீங்க?

டாக்டர்: நான் கொடுத்த பிரிஸ்கிரிப்ஷன் பெரிசா இருந்ததுன்னு, அதை 'எடிட்' செய்து பாதி மருந்துதான் சாப்பிட்டிருக்கார்!

எஸ். வெங்கட்ராமன், சென்னை—53.

◆ பத்திரிகை ஆசிரியர் (உதவி ஆசிரியரிடம்): ஆபாசச் சுவரொட்டிகள், திரைப்படங்கள், விளம்பரங்கள் இதையெல்லாம் எதிர்த்து அடுத்த வாரம் நம்ம பத்திரிகையில சிறப்புக் கட்டுரை எழுதணும். அதோட சேர்த்துப் பிரசுரிக்கத்தானும் அரைடஜன் ஆபாசப் படங்கள்!

ஜோதிர்லதாகிரிஜா, சென்னை — 101.

◆ துணை ஆசிரியர்: சார், உங்களைக் கண்டபடி தாக்கி ஒரு கடிதம் வந்திருக்கு.

ஆசிரியர்: பலே! என்னுடைய காரசாரமான தலையங்கத்தைக் கண்டித்தா?

துணை ஆசிரியர்: இல்லை சார்; நீங்க நாலு மாசமா ஊரில் இருக்கிற உங்க மனைவிக்குப் பணம் அனுப்பலையாம். அவங்கதான் எழுதியிருக்காங்க!

சுதாசிவகுமார், சென்னை—24.

◆ ஒருவர்: மாப்பிள்ளை என்ன செய்கிறார்?

மா. வீட்டில் ஒருவர்: பத்திரிகை ஆசிரியரா இருக்கார்...

ஒருவர்: என்ன கிடைக்கும்?

மா. வீட்டில் ஒருவர்: தாறுமாறா எழுதினா ஜெயில் தண்டனை கிடைக்கும்!

ஜி. எஸ். ராஜேந்திரன், திருச்சி—8.

ஒவ்வொரு ஜோக்கும் ரூ. 200 பரிசைச் சமமாகப் பகிர்ந்து கொள்கின்றது!



பிரபல பாடகர் ஒருவர், மேடையில் பூர்வி கல்யாணி ராகத்தை மெய்மறந்து ஆலாபனை செய்து கொண்டிருந்தார். ரசிகர் கூட்டத்தினிடையில் சிஷ்யைகள் புடைசூழ அமர்ந்திருந்த ஓர் இசை ஆசிரியை, அந்தச் சமயத்தில் ஓர் இசை வகுப்பையே நடத்திவிட்டார்! பூர்வி கல்யாணிக்கும் பந்துவராளிக்கும் இடையே உள்ள வித்தியாசத்தைப் பாடிக் காண்பித்து, இரண்டு ராகங்களிலும் உள்ள கீர்த்தனைகளைப் பட்டியல் போட்டு, தமது மேதாவிலாசத்தைப் பறைசாற்றிக் கொண்டார். மாணவிகள் மட்டுமின்றி இதர ரசிகர்களும், பாவம், சொல்லவும் முடியாமல் மெல்லவும் முடியாமல் அபார சகிப்புத் தன்மையுடன் ஆசிரியையின் செயல் விளக்கத்

# கலையை ரசிகர்களிடமிருந்து காப்பாற்றுங்கள்!

தைப் பொறுத்துக் கொண்டிருந்தனர்!

இதைப் போன்ற அநாகரிகங்கள் நமது இசைக் கச்சேரிகளைக் கேட்க வருகிறவர்களிடையே அனேகம்! அனேகம்! அநாகரிகம் என்று தெரிந்தோ தெரியாமலோ, கூடக் கூடப் பாடுவது, பலக்கத் தாளம் போடுவது போன்ற பல செயல்களில் ஈடுபடுவோருடைய மனசாட்சியைத் தட்டிக் கேட்கும் விதமாக ஒரு சிறிய கையேட்டை அச்சடித்துக் கச்சேரிகளுக்கு வருவோரிடம் வழங்க, மியூசிக் அகாடமியும் கலா மந்திர் அறக்கட்டளையும் இணைந்து ஏற்பாடு செய்துள்ளன. பின்வரும் விதிகளைக் கடைப்பிடிக்கும்படி சிபாரிசு செய்கிறது, அந்தக் கையேடு. (சுதந்திர இந்தியாவில் சிபாரிசு தான் செய்ய முடியுமேயொழிய கட்டாயப் படுத்த முடியாது அல்லவா?):

1. கச்சேரி ஆரம்பிக்கும் முன்னர் உங்கள் இருக்கையில் அமர்ந்து விடுங்கள்.

2. இது சாத்தியமில்லை எனில் இரண்டு பாட்டுகளுக்கு அல்லது நடனங்களுக்கு நடுவே உள்ள சிறிய இடைவேளையின் போது இருக்கையில் வந்து அமருங்கள், அல்லது எழுந்து செல்லுங்கள்.

3. பாடல் அல்லது நடனத்தின் இறுதி வரை காத்திருந்து நியாயமான பாராட்டுக்குரியதெனில் பலமாகக் கைதட்டித் தெரிவியுங்கள்.

4. பக்கத்தில் உள்ளவர்களிடம் பேசி அவர்களுடைய கவனத்தைத் திசை திருப்புவதோடு கலைஞரையும் தொந்தரவு செய்ய வேண்டாம்.

5. நிகழ்ச்சியின் போது ஒலி/ஒளிப்பதிவு செய்வதைத் தவிர்க்கவும்.

6. உணவுப் பண்டங்களையும் பானங்களையும் அரங்கத்துக்குள் எடுத்துச் சென்று சுவைக்காதீர்கள்.

7. இறுதியில் மங்களம் பாடும் போது அவசர அவசரமாக எழுந்து ஓடாமல் கடைசி வரை இருக்கையில் அமர்ந்திருங்கள்.

'நாட்டியோத்ஸவா' என்ற நாட்டியக் கலைவிழாவை இந்த ஆண்டு கலா மந்திர் அறக்கட்டளை, மியூசிக் அகாடமியுடன் இணைந்து நடத்துகிறது. இந்த ஒரு வார கால நடன விழாவில் புதிய நாட்டியக் கலைஞர்கள் மட்டுமின்றிப் புகழ் பெற்றவர்களும் கலந்து கொள்கிறார்கள். பதினறு பேருக்கு அரங்கேற வாய்ப்பு அளிக்கப்படும். இளம் கலைஞர்களில் தலை சிறந்தவர்களுக்கு ஓராண்டு கால நாட்டியப் பயிற்சிக்கான உதவித் தொகை வழங்கப் படும்.

கலா மந்திர் அறக்கட்டளை நுண்கலைகளை மேம்படுத்தும் நோக்குடன் தொடங்கப்பட்டது. இதன் தலைவர் என்ஃபீல்டு விசுவநாதன்.

அகாடமி — கலா மந்திர் கூட்டு முயற்சியில் இன்னொரு புதுமை — நாட்டியோத்ஸவத்தின் போது கலைஞர்களின் திறமையைக் கணிக்கச் சொல்லிப் பார்வையாளர்களையே கேட்கப் போகிறார்கள்! நிகழ்ச்சிகளுக்கு வருவோரிடம் கேள்வித்தாள்கள் வழங்கப் படும். நிகழ்ச்சியின் தரத்தை விமர்சிக்கும் வகையில் அமைந்த இக்கேள்விகளுக்குத் தக்க பதில்கள் எழுதி அதற்கென்று வைக்கப்பட்டுள்ள பெட்டியில் அதைப் போட்டு விட வேண்டும். இந்த ஜனநாயக முறை கருத்துச் சேகரிப்பு, கலைஞர் — பார்வையாளர் இருவரையுமே அதி கவனமாக இயங்கச் செய்யும் என்பதில் சந்தேகமில்லை.

— நமது நிருபர்

# "ஊரையும் கொடுத்துவிட்டுக் காத்துக் கிடக்கிறோம்..."

"நாங்களெல்லாம் மாதச் சம்பளக்காரர்கள். ஏதோ கடனோ, உடனோ பெற்றுச் சொந்தமாக ஒரு வீட்டு மனை வாங்கணும்கிற ஆசையில் காரைக்குடி கூட்டுறவு வீடு கட்டும் சங்கம் மூலமாகச் சூடாமணிபுரம் லே — அவுட்டில் வீட்டு மனை வாங்கினோம். மொத்தம் சுமார் எழுநூற்றைம்பது வீட்டு மனைகள். கிட்டத்தட்ட ஏழு வருடங்களாகியும் விற்பனைப் பத்திரத்தைக் கொடுக்காமல் இழுத்தடிக்கிறார்கள். அதனால் வீடு கட்ட முடியவில்லை. சங்கத் தலைவர் சுப்பையா அம்பலம் அவர்களிடம், 'எப்போது எங்களுக்கு விற்பனைப் பத்திரம் கொடுப்பீர்கள்?' என்று கேட்டால், மிரட்டுகிறார். அவருடைய மகன் அ. தி. மு. க. எம். எல். ஏ. வாக இருப்பதால், போலீஸும் அவர்களுக்குத் துணை போகிறது..." — என்று ஒரு நீண்ட கடிதத்தை எழுதியிருந்தார்கள் சூடாமணிபுரம் வீட்டு மனை ஒதுக்கீடு செய்யப்பட்டோர் நலச் சங்கத்தினர்.

அதன் தலைவரான டாக்டர் கிருஷ்ணமூர்த்தியைக் காரைக்குடியில் சந்தித்தோம்.

"நாங்கள் அட்வான்ஸ் கொடுத்த தொகையில்தான் நிலமே வாங்கப்பட்டது. பின்னர் சங்கம் சொன்ன விலையை நாங்கள் செலுத்தி விட்டோம். 'விற்பனைப் பத்திரத்தைக் கொடுப்பார்கள்' என்று காத்துக் கொண்டிருந்தால், கிட்டத்தட்ட ஏழு வருடங்களாக இழுத்தடிக்கிறார். இடையில் சங்கத்துக்கு இயக்குனர் தேர்தல் வந்தது. சங்கத்தின் செயல்பாடு குறித்து ஏற்கெனவே வெறுப்புற்றிருந்த நாங்கள், ஒரு நலச் சங்கத்தை ஏற்படுத்தி இருந்தோம். அப்போது நடந்த இயக்குனர் தேர்தலில் எங்கள் நலச் சங்கத்தைச் சேர்ந்த ஐந்து பேர் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். இந்தத் தேர்தலில் போட்டியிட்ட தலைவரின் மகன் (தற்போது அ. தி. மு. க. எம். எல். ஏ.) தோற்கடிக்கப்பட்டார். அந்த ஆத்திரத்தில் தான் தலைவர் இப்படி எங்களுக்கு எதிராகச் செயல்படுகிறார்.

"விற்பனைப் பத்திரம் கிடைக்காததால் நாங்கள் வீடு கட்ட முடியவில்லை. ரோடுகள் போட்டு லே — அவுட்டை முனிசிபாலிடிக்கு ஒப்படைக்காமல் இருப்பதால் வீட்டு ப்ளானை அங்கீகரிக்க மாட்டார்கள். எங்கள் நலச்சங்க உறுப்பினர்கள் மிகக் கடுமையாகப் போராடி அலாட்மெண்ட் லெட்டர் வாங்கி விட்டார்கள். ஆனால் விற்பனைப் பத்திரத்தை வாங்க முடியவில்லை. நிலத்தை வீட்டு மனைகளாகப் பிரித்து விற்றுக் கிடைத்த இருபது லட்சத்தில் கணிசமான தொகையை மத்திய வங்கியில் போடாமல், தாம் தலைவராக இருக்கும் காரைக்குடி நகர வங்கியில் போட்டிருக்கிறார். கேள்வி கேட்டால் கன்னாபின்னாவென்று பேசுகிறார். 'எல்லாம் மெதுவாகத்தான் நடக்கும்' என்கிறார்.

"சங்கத்தில் பண வசதி இருந்தும் சீக்கிரம் காரியங்களை முடிக்காமல் மெத்தனமாக இருக்கிறார். அவர் செயல்படுவதைப் பார்த்தால் இன்னும் காலியாக உள்ள ஒரு சில வீட்டு மனைகளையும் நல்ல விலைக்கு விற்றுப் பணத்தைப் பையில் போட்டுக் கொள்ளலாம் என்று காத்திருப்பது போலத் தெரிகிறது. எங்கள் சந்தேகத்துக்குக் காரணம், ஏற்கெனவே கல்யாண மண்டபத்துக்கு ஒதுக்கப்பட்ட ப்ளாட்டை விற்று விட்டார் என்பதுதான். மேலும் இயக்குனராக இருந்த எங்கள் நலச்சங்க உறுப்பினரை (அவர் ஓர் ஆசிரியர்) தமது செல்வாக்கைப் பயன்படுத்தி ஊரை விட்டே மாற்றி விட்டார். ஜெனரல் பாடி மீட்டிங்குகளை வேலை நாட்களில் வைக்கிறார். எங்களுக்கு என்ன செய்வதென்றே புரியவில்லை. மேலும், காலம் கடக்கக் கடக்க எங்களுடைய ஓய்வு பெறும் ஆண்டும் நெருங்கிக் கொண்டே வருவதால், வீடு கட்ட லோன் போடும் போது தொகையும் குறைந்து போய்க் கடைசியில் வீடு கட்ட முடியாமலே போய்விடும் அபாயமும் இருக்கிறது.

— இவ்வாறு டாக்டர் கிருஷ்ணமூர்த்தியும் அவரது நலச்சங்க உறுப்பினர்களும்



• கிருஷ்ணமூர்த்தி

• சுப்பையா அம்பலம்

சரமாரியாகச் சுப்பையா அம்பலத்தின் மீது குற்றம் சாட்டினார்கள்.

சுப்பையா அம்பலம் என்ன சொல்கிறார் என்று தெரிந்து கொள்ள அவரைச் சந்தித்தோம். இவர் முன்பு காங்கிரஸ் எம்.பி. யாகவும், எம். எல். ஏ. வாகவும் இருந்தவர். கேட்டோம்.

"இலுப்பைக்குடி கோயில் தேவஸ்தான இடத்தை மிகக் குறைந்த விலைக்கு வாங்கி 125 ஏக்கரில் 728 வீட்டு மனைகளைப் பிரித்தோம். இந்தப் புது லே — அவுட்டில் பல சிக்கல்கள்.

"சூடாமணிபுரம் லே — அவுட்டில் மனைகள் வாங்கிய பலர் ரியல் எஸ்டேட் பிஸினஸ் காரன் மாதிரி செயல்படுபவர்கள். லாபம் வந்தால் விற்று விடுவார்கள். அதை நான் எதிர்க்கிறேன். அவர்களுக்கு என்னால் வீட்டு மனை கொடுக்க முடியாது. இது தவறு? மேலும் லே — அவுட்டைப் பதிவு பண்ணுவதில் தகராறு. இரண்டு சர்வே நம்பர்கள் கொண்ட இந்த லே — அவுட்டில் ஒரு சர்வே நம்பருக்கு மட்டும் எக்கச்சக்கமாக மதிப்புப் போட்டு விட்டார்கள். அதனால் நாங்கள் இந்த லே — அவுட்டை வாங்கியதை விடவும் அதிகமாகப் பணம் செலவழித்துப் பதிவு செய்ய வேண்டியிருந்தது. ஆகவே, ஸ்டாம்பு சட்டத்தின் அடிப்படையில் அதற்காக வழக்குப் போட்டிருக்கிறேன். அதோடு முடிந்ததா? வருமான வரித்துறை இந்த விவகாரத்தில் தலையிடவே, அதையும் தடுத்து நிறுத்த நடவடிக்கை எடுக்க வேண்டிய சூழ்நிலை. பிறகு, சாலை வசதியெல்லாம் செய்த பிறகுதான் முனிசிபாலிட்டியிடம் லே — அவுட்டை ஒப்படைக்க முடியும். பின்னர் தான் வீடு கட்ட ப்ளானை ஓ.கே. செய்வார்கள். அதற்காக முனிசிபாலிடியுடன் போராட்டம்... இப்படிப் பல சிக்கல்கள் இருக்க, நான் தாமதப்படுத்துகிறேன் என்று சொல்வது தவறு."

"நீங்கள் உங்கள் செல்வாக்கைப் பயன்படுத்திச் சங்க இயக்குனர் ஒருவரை மாற்றி விட்டீர்களாமே?"

"ஏன் சார் செய்யக் கூடாது? எனக்குத் தொல்லை கொடுக்கிறார்கள். அவர்களுக்கு நான் மட்டும் தொல்லை கொடுக்காமல் இருப்பேனா?" என்று கடுகடுத்தார் அம்பலம்.

கூட்டுறவுத் துறையினர் இந்தத் தகராறில் தலையிட்டுக் கூடிய விரைவில் விற்பனைப் பத்திரங்களை மெம்பர்களுக்கு வழங்க ஏற்பாடு செய்ய வேண்டும். இல்லையென்றால், நான்காயிரம், ஐயாயிரம் என்று பணத்தைக் கட்டிவிட்டு ஏழாண்டுகளுக்கும் மேலாகக் காத்துக் கிடக்கும் அந்த மாதச் சம்பளக்காரர்கள் கடைசியில் வீட்டு மனை வாங்கியும் வீடு கட்டாமலேயே வேலையிலிருந்து ஓய்வு பெற்று அலைய வேண்டியதாகி விடும். இந்த பயம்தான் அவர்களுக்கும் இருக்கிறது.

— ப்ரியன்

# மானாமதுரை: மனமிருந்தால் மார்க்கமுண்டு

* சிப்காட் அலுவலகம்



* ரஞ்சிதம்



* பாண்டி

சிவகங்கையிலிருந்து மானாமதுரை செல்லும் வழியில் மானாமதுரைக்கு மூன்று கி. மீ. முன்னால் இருப்பதுதான் சிப்காட் தொழிற்பேட்டை. பரவாயில்லையே; தமிழக அரசு கூடப் பிற்பட்ட பகுதிகளை ஏறெடுத்துப் பார்த்துத் தொழிற்பேட்டை அமைத்திருக்கிறதே! மக்கள் அதிர்ஷ்ட சாலிகள்தான் என்று நினைத்துக் கொண்டீர்களானால், சாரி!

கடந்த 1980 இல் சிறு தொழில்களுக்காக அமைக்கப்பட்ட இந்தத் தொழிற்பேட்டையின் வளர்ச்சி — எம். ஜி. ஆர். அரசின் கோப்பு போலத்தான், தேங்கிக் கிடக்கிறது!

''இங்கே தொழில் துவங்குபவர்களுக்கு நிறையச் சலுகைகள் தருகிறோம். மின்சாரக் கட்டணத்தில் ஐந்து வருடங்களுக்குச் சலுகை உண்டு. முதலீட்டில் பதினைந்து சதவீதத்தை அரசு மான்யமாகத் தருகிறது.'' என்றுவிவரங்களை அடுக்கிக் கொண்டே போனார் திட்ட அலுவலரான சுந்தரேசன்.

''நீங்கள் சொல்வது போல் இந்த அளவுக்குச் சலுகைகள் கொடுத்தும் தொழிற்பேட்டை வளர்ச்சியடையவில்லையே?''

''வளர்ச்சி மிகவும் மெதுவாக இருப்பதற்குச் சில காரணங்கள் இருக்கின்றன. முக்கிய நகரங்களை விட்டு வெகு தொலைவில் இருப்பதால், மூலப்பொருள்களை வரவழைப்பது மற்றும் உற்பத்திப் பொருள்களை வெளியே அனுப்புவது போன்றவற்றுக்குச் சரியான போக்குவரத்து வசதி இல்லை என்பது ஒரு முக்கியக் காரணம். ஆனால் நிலைமை எதிர்காலத்தில் சரியாகும் என்று நம்புகிறோம். எட்டு யூனிட்டுகளில் தொழில் செய்ய ஆரம்பித்து விட்டார்கள். பன்னிரண்டு தொழிற்சாலைகளுக்குக் கட்டுமானப் பணி நடந்து வருகிறது...''

திட்ட அலுவலரின் கூற்றுக்களை அப்படியே மறுக்கிறார் மானாமதுரை மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் நகரச் செயலாளரான பாண்டி.

''இங்கு தொழில் துவங்க வரும் சிறு தொழில் அதிபர்களை சிப்காட் துரத்தி அடிக்கும் விதம் வேதனையானது. கட்டடப் பிளான் அப்ரூவல் பெறுவதற்கு அலைச்சல், லஞ்சம், முதலீட்டுத் தொகையில் மான்யம் தருவதற்குத் தாமதம்; மின்சாரம் கொடுப்பதில் இழுத்தடிப்பு, சிமெண்ட் கிடைக்காத சிரமம்... இப்படிப் பல்வேறு இடையூறுகள். இதனால்தான் இத்தனை தாமதம்...'' என்கிறார் பாண்டி. எது உண்மை?

சரி, தொழில் வளர்ச்சிதான் இப்படி என்றால், மானாமதுரை நகரின் வளர்ச்சி எப்படி இருக்கிறது? பார்க்கலாம் என்று நகருக்குள் சென்றோம்.

''பஸ் ஸ்டாண்டைப் பாருங்கள். அந்தக் காலத்தில் முப்பது பஸ்கள்தான் வந்து போயின. இப்போது தினசரி முந்நூறு பஸ்கள் வந்து போகின்றன. இந்த பஸ் ஸ்டாண்டை விரிவுபடுத்திக் கட்ட 82 லும், 84 லும் ஒதுக்கப்பட்ட நிதி உபயோகப்படுத்தாததால், இப்போது லேப்சாகிப் போய்விட்டது. இதற்குக் காரணம், பஸ் ஸ்டாண்டை ஒட்டியுள்ள காலி நிலத்தைச் சம்பந்தப்பட்ட பள்ளி நிர்வாகம் கொடுக்க மறுப்பதுதான். இத்தனைக்கும் அந்தப் பத்து ஏக்கர் இடம் சுமார் இருபது ஆண்டுகளுக்கு முன் ஒக்கூர் வெள்ளையன் செட்டியார் மேல்நிலைப் பள்ளிக்கு விளையாட்டுத் திடலுக்காகப் பஞ்சாயத்தால் கொடுக்கப்பட்டதுதான். அந்த நிலத்தைப் பள்ளி நிர்வாகம் மரக்கடைகளுக்கும் ஹோட்டல்களுக்கும் வாடகைக்கு விட்டிருக்கிறது. ஆனால் பொது மக்களின் நன்மைக்காகக் கேட்டால் கொடுக்க மறுக்கிறது. சண்டித்தனம் செய்கிறது!''

பாண்டி சொல்வது சரிதானா என்று தெரிந்துகொள்ள அந்தப்பள்ளியின் தலைமை யாசிரியர் எஸ். ஆர். எம். ரஞ்சித்தைச் சந்தித்தோம்.

"நீங்கள் சொல்லும் இடம் கிரயமாக வாங்கப்பட்டதே தவிர, பஞ்சாயத்து எங்களுக்குக் கொடுக்கவில்லை. எங்கள் மாணவர்கள் அதை இப்போது விளையாட்டுத் திடலாகப் பயன்படுத்தாததன் காரணம், பஸ் ஸ்டாண்ட் கழிப்பறைதான். கால்பந்து, ஹாக்கி, கிரிக்கெட் என்று விளையாடினால் பந்து அந்தக் கழிவுநீரில் போய் விழுகிறது. எத்தனை தடவை பந்தைச் சாக்கடையிலிருந்து எடுத்துக் கழுவி விளையாட முடியும்? அதனால்தான் மாணவர்கள் அந்தக் காலியிடத்தை விளையாட்டுக்குப் பயன்படுத்தவில்லை. மரக்கடைக்கும் ஹோட்டல்களுக்கும்வாடகைக்குவிட்டிருப்பதுஉண்மைதான். அது விளையாட்டு மைதானத்தின் ஓரம் என்பதால் மாணவர்களின் விளையாட்டைப் பாதிப்பதில்லை என்பதையும் புரிந்து கொள்ள வேண்டும். மேலும் இப்போது பஸ் நிலையம் இருக்கும் இடமே நாங்கள் கொடுத்ததுதான். பஸ் நிலையத்தை ஒட்டி இருக்கும் காலியிடத்தை அடுத்துத் தனியார் ஒருவருக்குச் சொந்தமான காலி மனை இருக்கிறது. அதை அரசு ஆர்ஜிதம் செய்து எங்களுக்குக் கொடுத்தால் இப்போதுள்ள இடத்தை நாங்கள் பஸ் நிலையத்திற்காகத் தரத் தயாராய் இருக்கிறோம். பள்ளியும் சரி, பஸ் நிலையமும் சரி இரண்டுமே பொது மக்களின் நன்மைக்காகத்தான். இது எங்களுக்குப் புரிகிறது. ஆனால் அரசுக்குத்தான் புரியவில்லை..."

— இப்படிச் சில எதிர்வாதங்களை எழுப்பினார் தலைமை ஆசிரியர். அவர் கூற்றிலும் நியாயம் இல்லாமல் இல்லை. ஆக, இருதரப்பினரும் மனம் திறந்து பேசினால் பிரச்னை சுமுகமாகத் தீர்ந்துவிடும். அப்படிப் பேசுவதற்குத்தான் இரண்டு தரப்பிலும் உள்ள சிலரின் 'ஈகோ' இடம் கொடுக்கவில்லை போலும்! அதுதான் பிரச்னையின் மூல காரணமே!

— கௌசல்யா

பசும்பொன் மாவட்டம் தொடர்பான புகைப்படங்கள்: கே.வி. ஆனந்த்

# அன்பார்ந்த வாசகர்களுக்கு,

ஒரு பத்திரிகையை உருவாக்கும் செலவில் தொண்ணூறு சதவிகிதத்துக்கு அதிகமாகவே நியூஸ்பிரிண்ட் எனப்படும் பத்திரிகைக் காகிதத்துக்குத்தான் கொடுக்க வேண்டியிருக்கிறது. அந்த நியூஸ் பிரிண்ட் விலை சர்வதேச மார்க்கெட்டில் சமீபத்தில் மிகவும் உயர்ந்து விட்டது. மேலும் உயரப் போவதற்கான அறிகுறிகள் உள்ளன. உள்நாட்டிலும் இப்போது நியூஸ் பிரிண்ட் தயாராகிறது. இதனை வாங்குமாறு அரசு பத்திரிகைகளை நிர்ப்பந்திக்கிறது. அயல் நாட்டுச் சரக்குடன் ஒப்பிடுகையில் இந்திய நியூஸ் பிரிண்ட்டின் தரம், மிகக் குறைவாகவும் விலை, மிக அதிகமாகவும் உள்ளது. விலையை மேலும் உயர்த்த அரசிடம் அனுமதி கோரப்பட்டிருக்கிறது! இந்தச் சூழ்நிலையில் கல்கி பத்திரிகையின் விலையை அதிகரித்தே ஆக வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டிருக்கிறது. வாசக அன்பர்கள் இந்த விலை உயர்வைப் பொருட்படுத்தாமல் தொடர்ந்து பேராதரவு அளித்து வர வேண்டும் என்று கோருகிறோம். கல்கியின் சமுதாயப் பார்வையும் இலக்கியக் கண்ணோட்டமும் சுதந்திர சிந்தனையும் நகைச்சுவை நோக்கும் என்றும் போல் உங்களை மகிழ்விக்கும் என்பதுடன் அநேகமாக வருகிற தை மாதத்திலிருந்து கல்கி வண்ணமயமாகவும் திகழும் என்பதையும் தெரிவித்துக் கொள்கிறோம்.

அடுத்த வாரம் செப்டம்பர் 6 உ இதழ் முதல் கல்கி,

| | | |
|---|---|---|
| தனிப்பிரதி விலை | ரூ. | 2/— |
| ஆண்டுச் சந்தா | ரூ. | 104/— |
| ஆறு மாதச் சந்தா | ரூ. | 52/— |



நிர்வாகி, கல்கி காரியாலயம்,
சென்னை — 32.



# ஒன்று எங்கள் ஜாதியே!







திரை கடலோடி மீன் திரவியம் தேடும் வாலிபன் ஒருவன். இந்த வாலிபனைக் காதலிக்கும் ஒரு மீனவ நங்கை. வாலிபனின் பணக்கார எதிரியின் மகனைக் காதலிக்கும் வாலிபனின் தங்கை. காதல், பாசம், கண்ணீர், மோதல்கள், கூடல்கள் — ஒன்று எங்கள் ஜாதியே.

ராமராஜனுக்குத் 'தாக்கத்' பற்றுது. என்னதான் நெற்றியில் ஸ்கார்ப் கட்டினாலும் முகத்தில் அதே விளக்கெண்ணெய் வழிசல். கொஞ்சம் தம் பிடித்தால் ஏணி மேல் ஏற முயற்சி செய்யலாம். இல்லையேல், மற்றவர்கள் ஏறி மிதித்து முன்னேறி விடுவார்கள்.

நிஷாந்தி பரவாயில்லை. துடுக்குத்தனம் நிறைந்த முகம். அவ்வப்போது ஓரத்தில் அழுதும் காட்டி விடுகிறார். முக்கியப்பட்ட கதாநாயகிகள் கால் ஷீட் தகராறு செய்யும் போது, ஆட்டத்தில் சேர்த்துக் கொள்ளலாம்.

எஸ். எஸ். சந்திரன், கடலரசன் செந்தில் காமெடியினால் அங்கங்கே சிரிக்க முடிகிறது.

வினுசக்ரவர்த்தி, விபீஷணச் சக்ரவர்த்தி. எதிர் முகாமிலிருந்து இந்த முகாமுக்குத் தாவுபவர். அவரும் செந்திலுமாய்ச் சேர்ந்து கொண்டு உண்டியலை உடைத்துச் சாராயமும், சால்னாவுமாய்க் கூத்தடிக்கும் ஸீன் இதழ்க்கடையில் நகை.

கங்கை அமரன் பாடல்களுக்கு இசையமைத்திருக்கிறார். கேட்டபோது இரண்டு பாடல்கள் நன்றாக இருந்தன. வெளியே வந்த பின்னர்?

கடைசிச் சண்டையில் கதாநாயகன் ஒரு பக்கம் ஆக்ரோஷமாகச் சண்டையிட ஒரு பக்கம் ரவிச்சந்திரனும் நிஷாந்தியும் கற்பழிப்புக் காட்சியில் ஓடிப் பிடித்து விளையாட — சிரிப்போ சிரிப்பு! ஆனாலும் ஒரு சண்டைக் காட்சியை இப்படியா படமாக்குவார்கள்.

அதே மாதிரி வில்லனின் படகை நாயகனின் படகு துரத்துகிறது பாருங்கள், கொஞ்சமாவது வேகம் இருக்க வேண்டாமா? ம்ஹூஹூம். அதுதான் நிஷாந்திக்கு நீச்சல் தெரியும் என்று முன்னாலேயே சொல்லியாகி விட்டதில்லை? கடலில் குதிக்க வேண்டியதுதானே அவர்?

குண்டுப் பொம்மை சுலக்ஷணா, கடைசி வரை ஒரு மௌன கீதம். ரவிச்சந்திரனைக் குத்துவதற்காகவே வெள்ளைப் புடைவையுடன் அலைகிறார்.

திரைக்கதை டைரக்ஷன் ராமராஜனே. முன்னேற நினைத்தால் அடுத்த தடவை அப்படிப் போட்டுக் கொள்ளாதீர்கள், சார்!

படகோட்டியின் உல்டா என்று கதாசிரியர் மார்தட்டிக் கொண்டிருக்கிறாராம். அதுவரைக்கும் சரி. சுவாரசியமாக உல்டா பண்ணக் கூடாதா?

—ஜெயமன்மதன்




# கல்கி

1987 ஆகஸ்டு 30
மலர் 46 இதழ் 5
பிரபவ ஆவணி 14




## தப்பினார் ஜெயவர்த்தன! ஒப்பந்தமும் வாழட்டும்!

ஜெயவர்த்தனவைக் கொலை செய்ய நடந்த முயற்சி, 'வெற்றி பெறுமா ஒப்பந்தம்?' என்று கேட்டவர்களுக்கு வெற்றியுமல்ல; ஒப்பந்தத்தை 'மகத்தான வெற்றி' என்று கொண்டாடியவர்களுக்குத் தோல்வியுமல்ல. ஆனால் ராஜீவ் மீது ஒரு தாக்குதல் நடந்து; அதன் பின்னர் பாதுகாப்பு ஏற்பாடுகள் பலப்படுத்தப்பட்ட பிறகும் ஜெயவர்த்தன மீது ஒரு தாக்குதல் நடத்த முடிகிறது என்றால் என்ன அர்த்தம்? ஒப்பந்தம் சிங்களவரிடையே மிகுந்த வெறுப்புணர்ச்சியை வளர்த்திருக்கிறது என்றும் அந்த வெறுப்புணர்ச்சி, பாதுகாப்பு ஏற்பாடுகளை ஊடுருவி அதனிடையேயும் பரவுகிறது என்றும் அர்த்தம்! ஆக, சமாதானத்தையும் அமைதியையும் உருவாக்க வேண்டிய ஒப்பந்தம் வெறுப்பையும் மனக்கசப்பையும் வளர்த்துவிட்டது கண்கூடு. காரணம் என்ன? அணுகுமுறை சரியில்லாததுதான்!

ஜெயவர்த்தனவுடன் ஓர் ஒப்பந்தத்தைச் செய்து கொண்டு, உள்நாட்டில் சரிந்து வரும் தமது செல்வாக்கை நிலைநிறுத்த ராஜீவ் அவசரப்பட்டார். தமிழ்ப் போராளிகளை ஒதுக்கினார். உள்நாட்டில் தமக்குத் தோன்றி வரும் எதிர்ப்பைக் கண்டு ஜெயவர்த்தன கலக்கமுற்றார். ராஜீவுடன் ஒப்பந்தம் செய்து கொண்டு தமது நிலையைப் பலப்படுத்திக் கொள்ளக் கருதினார். சிங்களப் போராளிகளைப் புறக்கணித்தார். விளைவு, இரு தரப்புப் போராளிகளிடையேயும் மனக்கசப்பே மிகுந்தது. ஆயினும் தமிழ்ப் போராளிகளுக்கு, இந்தியத் துருப்புக்களை எதிர்க்க மனமில்லை என்பது ஒன்று; தனி ஈழம் கிடைக்கவில்லை என்றாலும் ஒரே தனி மாநிலத்துக்கு ஒப்பந்தம் வழி வகுக்கிறது என்ற ஆறுதல் மற்றொன்று — இரண்டும் அமைதி காக்கச் செய்திருக்கிறது. ஆனால் மறுதரப்பில் நிலைமை என்ன? சிங்களத் தீவிரவாதிகளின் மனங்களில் அமைதி இல்லை; குமுறல் அதிகரித்திருக்கிறது.

ஆக்கிரமிப்பு என்ற பேச்சுக்கே இடமில்லையென்றாலும் இலங்கை மண்ணில் ஏராளமான இந்தியத் துருப்புக்களும் யுத்த தளவாடங்களும் குவிந்திருப்பதால் சிங்களவரின் மனத்தில் அது எத்தகைய பாதிப்பை ஏற்படுத்தும் என்பது யோசிக்கப்பட்டதா? தனி மாகாணக் கோரிக்கைக்கு விட்டுக் கொடுப்பது என்பது தனித் தமிழ் ஈழத்துக்கு உடன்படுவதற்கான முதல் படியே என்று சிங்களவர் கருதக் கூடும் என்பது சிந்திக்கப்பட்டதா?

இரு நாடுகளிடையே தலைவர்கள்தான் ஒப்பந்தத்தில் கையெழுத்துப் போடுகிறார்கள். ஆனால் ஜனநாயகத்தில் தலைவர்கள் மக்களை அரவணைத்து அவர்களை உடன் அழைத்துச் செல்ல வேண்டும். அவர்களின் ஒப்புதலைப் பெற்றுச் செயல்பட வேண்டும். மக்களின் மன இயல்புகளைப் புரிந்து கொள்ளாமல் செயல்படும் தலைவர்கள் வெற்றி பெற முடியாது. இங்கு நடந்தது என்ன?

ராஜீவ் இந்த ஒப்பந்தம் தமது மாபெரும் வெற்றி என்பது போல் நடந்து கொண்டார்; கூட்டுச் சேரா நாடுகளின் வெற்றி என்று முழங்கினார்; ஜெயவர்த்தனவின் பெருந்தன்மையைப் போற்றினார்; எம். ஜி. ஆரின் ராஜதந்திரத்தைப் பாராட்டினார். இவையா முக்கியம்? சிங்களப் பெரும்பான்மையினரின் மனம் புண்படாதிருக்கவும் அவர்களின் அச்சத்தைப் போக்கும் விதத்திலும் ஏற்ற சொற்களைப் பேச வேண்டியதல்லவா முக்கியம்! ஜெயவர்த்தனவும், ஒப்பந்தத்தை ஏற்று இருதரப்பினரும் அமைதியாக வாழ வேண்டியதன் அவசியத்தையோ, நாட்டின் பொருளாதார முன்னேற்றத்துக்கு இது இன்றியமையாதது என்பது குறித்தோ போதிய அளவு பிரசாரம் செய்யவில்லை. ஒப்பந்தத்தை மக்கள் முன் வைத்து அதனை அவர்கள் ஏற்குமாறு போதிய அளவு பிரசாரம் செய்து, பிறகு கையெழுத்தாகியிருந்தால் அப்போது நிலைமையே வேறாக இருந்திருக்கும். எல்லாவற்றையும் ரகசியமாகப் பொத்தி வைத்துப் பாதுகாத்து, திடீரென்று ஒருநாள் கையெழுத்திட்டு, அதனை ஒரு சில தலைவர்களின் தனிப்பட்ட மகத்தான வெற்றி என்றும் மார் தட்டும்போது, போராட்டத்தில் சம்பந்தப்பட்டிருந்தும் கலந்தாலோசிக்கப்படாத மக்கள் கொதித்தெழவே செய்வர்.

இப்போது ஜெயவர்த்தன மீது ஏற்பட்டுள்ள அனுதாபத்தை ஒப்பந்தத்துக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்ள ஒரு வாய்ப்பு இருக்கிறது. இதையேனும் நழுவ விடாமல் ராஜதந்திரத்துடன் இரு நாட்டுத் தலைவர்களும் நடந்து கொள்ளட்டும்.

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்.

# தொடுவானம் தொடுவதற்கல்லை

"மேடம் உங்களைக் கையோட கூட்டி வரச் சொன்னாங்கம்மா!"

வகுப்பை முடித்துவிட்டுச் சுமதி அப்போதுதான் ஓய்வறைக்குள் நுழைந்து கொண்டிருந்தாள்.

"இதோ வர்றேன்னு சொல்லு."

ஆயா போனாள்.

கையிலிருந்த புத்தகங்கள், டஸ்ட்டர் எல்லாவற்றையும் மேஜை டிராயருக்குள் வைத்துப் பூட்டிவிட்டு, வாஷ்பேசினில் கைகழுவி, முகம் கழுவித்துடைத்துக் கொண்டாள்.

"சீக்கிரம் வரச் சொன்னாங்கம்மா!" — ஆயா மறுபடியும் சொன்னாள்.

ஏதோ அவசரம் போலிருக்கிறது.

"இதோ கிளம்பிட்டேன். வெளியே கிளம்பிட்டிருக்காங்களா?"

"இல்லேம்மா, யாரோ கார்ல வந்திருக்காங்க."

என்ன குற்றச்சாட்டோ, என்ன முறையீடோ? பள்ளிக்கூடமென்றால் இப்போதெல்லாம் கிள்ளுக்கீரையாகப் போய் விட்டது. வந்திருப்பது யாராவது அரசியல்வாதியாகத்தான் இருக்க வேண்டும்! யாராக இருக்குமென்று மனம் முணுமுணுக்கத் தலைமை ஆசிரியையின் அறைக்குள் நுழைந்தாள்.

"வாம்மா சுமதி... இவங்க கண்ணப்பனாம். உன்னைப் பார்க்கணுமாம். காலேஜ்ல விழா நடத்தறாங்களே, அதுக்காக மெட்ராஸ் லேர்ந்து வந்திருக்காங்களாம்."

நாற்காலியில் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்த கண்ணப்பன் இளைஞனுக்கேற்ற மிடுக்குடன் சடக்கென்று எழுந்து நின்று, அதே சமயம் பெரிய மனித தோரணையில் பவ்யமாக வணக்கம் சொன்னான். சுமதியும் அனுசரித்து வணக்கம் சொன்னாள்.

"நான் சரத்சந்திரன் சாரோட பெர்சனல் அசிஸ்டென்ட்... அவர் உங்களைக் கூட்டிக்கிட்டு வரச் சொன்னார். நீங்கள் சிரமம் பார்க்கக் கூடாது."

கண்ணப்பன் ரகசிய பாவனையில் சுமதிக்கு மட்டுமே கேட்பது போல் சொன்னான். அது தலைமை ஆசிரியையின் காதுகளுக்கும் எட்டியதால் கண்கள் அகல விரிந்தன.

**இளம்பாரதி**

"யாரு...? சினிமா ஹீரோ சரத் சந்திரனா?"

வயதுக்கு மீறிய ஆர்வம்.

"ஆமாங்க. ஆனால் அது யாருக்கும் இங்கே தெரிய வேண்டாம்."

"கவலைப்படாதீங்க. எனக்குத் தெரியாம இந்த ரூமுக்குள்ளே யாரும் வரமாட்டாங்க. அது சரி... சுமதி, உனக்கு அவங்களை முன்னாடியே தெரியுமா?"

சுமதி தலையைக் குனிந்து கொண்டாள்.

"அப்படீன்னா நானும் வர்றேன், கிளம்பு. ஏதோ விவரம் தெரிஞ்சுதான் கூப்பிட்டிருக்கணும்."

"நான் வரல்லே..."

சுருக்கென்று சொல்லிவிட்டுச் சுமதி அங்கிருந்து நகர்ந்தாள். ஓய்வறை சென்று நாற்காலியில் சரிந்து விழுந்தாள். நல்ல வேளை, சக ஆசிரியைகள் எல்லோரும் அவரவர் வீடு நோக்கிக் கிளம்பிப் போயிருந்தார்கள்.

சரத் இப்போது ஆள் அனுப்புவானேன்? அவளுக்கு ஏதும் புலப்படவில்லை. நிழலாடியது தெரிந்து திரும்பிப் பார்த்த போது, மறுபடியும் தலைமை ஆசிரியை.

"என்னாச்சு சுமதி உனக்கு? நாங்க யாராச்சும் தப்பா நெனச்சுக்குவோம்னு கூச்சப்படுறியா? அவரைப் பார்க்கணும்னு சிறிசு பெரிசுன்னு வித்தியாசமில்லாமப் பழி கிடக்கிறாங்க. நீயானா இப்படி முரண்டு பண்றே. இதோ பாரு, அவரை நம்ம ஸ்கூலுக்குக் கூப்பிட்டா ஒரு புது பில்டிங் கட்டறதுக்குப் பயன்படுத்திக்கிடலாம். பிள்ளைங்க மரத்தடியிலே படிக்கிற கஷ்டமாவது தீரும்! உன்னோட டேலன்ட் பத்தி யாரோ சொல்லப் போய்த்தானே கூப்பிட்டனுப்பிச்சிருக்காரு...?"

சுமதி தலைநிமிர்ந்து பார்த்தாள். இப்போது பின்னணியில் வேறு சில சக ஆசிரியைகள். அதாவது, இதற்குள்ளாகவே பிரபல நடிகர் சரத்சந்திரன் சுமதிக்காகக் கார் அனுப்பிக் காத்திருப்பதான செய்தி பரவி விட்டிருக்கிறது...! அந்தப் பார்வைகள்... நடிகனோடு பெண்களைத் தொடர்பு படுத்திப் பேசும் பார்வைகள்... இந்த வாய்ப்பு தங்களுக்கு வந்திருக்கக் கூடாதா என்ற ஆதங்கப் பார்வைகள்...

வார்த்தைகளால் இவர்களைச் சமாதானப் படுத்த முடியாது.

அவர்களையெல்லாம் மீறித் தப்பிப்பது போல் கைப்பையை எடுத்துக் கொண்டு நிலைப் படியைத் தாண்டிய போது

கண்ணப்பன்.

"மேடம், அவர் இன்னிக்குச் சேதுவுக்குத் திரும்பணும். நாளைக்குக் காலையிலே ஏவி. எம்.லே ஷூட்டிங். லேட்டாச்சுன்னு.."

"அவர் வேற யாரையோ சொல்லியிருப்பார் போலிருக்கு. எனக்கு அவரைத் தெரியாதே..."

பரபரப்பாக மாணவிகள் கூட்டம் அங்கு கூடிவிடவே, கண்ணப்பனையும் தவிர்த்து அவள் வாசலுக்கு விரைந்தாள். பதிவாக வரும் ரிக்ஷா ஆயத்தமாக இருக்கவே ஏறி உட்கார்ந்தாள். ரிக்ஷா கிளம்பிற்று. எல்லோரும் தன்னையே உற்றுப் பார்ப்பது போன்ற பிரமை. ஆனால் அதையெல்லாம் மீறிச் சமூகத்தை உறுத்துப் பார்க்கும் திறன் அவளுக்கு ஏற்கெனவே வந்துவிட்டிருந்தது. வழி நெடுகப் பார்த்தாள். சூப்பர் நடிகரை வரவேற்பதாய் அங்கங்கே போஸ்டர்கள். சினிமாத் தொடர்பான பயிற்சிப் பட்டறை ஒன்று கல்லூரியில் ஒரு வார காலமாக நடந்து கொண்டிருக்கிறது. இன்று கடைசி நாள். வாழ்த்தியல் விழாவாம். போஸ்டர் ஒட்டி விளம்பரப்படுத்திக் கொள்ள இப்போது மாணவர்கள் நன்றாகவே தெரிந்து வைத்திருக்கிறார்கள்.

**சுமதி அதிர்ஷ்டசாலி என்று கல்யாணத்தின் போது எல்லோரும் வெளிப்படையாகவே பேசிக் கொண்டார்கள்.** குடித்தனம் வைக்க முதன் முதலில் ஊரை விட்டுக் கிளம்பிய போது தன் அதிர்ஷ்டத்தை எண்ணி மகிழ்ந்து திளைத்தாள். கனவுகள் சுமக்க முடியாமலும், குடித்தனம் பிருந்தாவனமாகவும் அமையவே, காலம் போன போக்குத் தெரியவில்லை. 'பிறந்த வீடு, புகுந்த வீடு — இரண்டில் எது ஒசத்தி?' என்று அவளுக்கே முடிவுகட்ட முடியவில்லை, எட்டாவது மாதம் வீட்டுக்கு அழைத்து வந்தார்கள், சீர் செனத்தி எல்லாம் வைத்து. அவ்வளவுதான்!

சரளைக்கல்லில் ரிக்ஷா தடுமாறவே சுமதி சுயநினைவுக்கு வந்தாள். கிழவனுக்குச் சாதகமாக ரிக்ஷாவை அங்கே தெரு முனையிலேயே நிறுத்தச் சொல்லி இறங்கி நடந்தாள். வீட்டை அடைந்து, கதவைத் திறந்து உள்ளே சென்றதும் ரேடியோ பெட்டிக்கருகில் ரமணி எழுதி வைத்திருந்த காகிதத் துண்டு பார்வையில் படும்படி இருந்தது.

— 'மம்மி, எங்கள் காலேஜில் நடந்து கொண்டிருக்கும் திரைக்கலைப் பயிற்சிப் பட்டறையின் இறுதி விழா இன்று மாலை நடக்கிறது. சூப்பர் ஹீரோ சரத்சந்திரன் கலந்து கொள்கிறார். நான் வரத் தாமதமாகும். ரேஷன் கடையில் இன்று சர்க்கரை போடவில்லையாம்!'

ஏதும் தோன்றாமல், எதிலும் நாட்டமில்லாமல் நாற்காலியில் மடங்கினாள். பார்வை தானாகச் சுவர் மீது விழுந்தது.

சுவரில் நான்கைந்து படங்கள். அவற்றுள் 'சூப்பர் ஹீரோ' சரத்சந்திரன் படமும் ஒன்று.

'சினிமாக்காரங்க படமெல்லாம் வீட்டிலே எதுக்குடா? என்றதற்கு, 'இருக்கட்டும்மா! அவர்தான் என் ஹீரோ!' என்று கம்பீரமாக மறுத்துவிட்டான். அந்த கம்பீரம் என்னவோ அவளுக்கும் இதமாகத்தான் இருந்தது.

அசதி நிலையில் எத்தனையோ கனவுகள். சில செழுமையானவை; சில அசட்டுத்தன



மாணவை...

முதல் பிரசவம். ஆண் குழந்தை. வாட்ட சாட்டமாக, சிவப்பாக. மடியில் கிடத்தி மார்போடணைத்துப் பாலூட்டிய போது, சொர்க்கத்தில் மிதப்பது போன்ற உணர்வு. பக்கவாட்டில் படுக்க வைத்துக் கொண்டு உறங்கிய போது, பாதி ராத்திரியில் அவன் காலால் எட்டி உதைத்தபோது, புடைவைத் தலைப்பைப் பற்றியிழுத்தபடி சிரித்தபோது... எல்லாமே ஆனந்தம்தான்.

பிரசவத்தின் போது கணவன் வரவில்லை. வாழ்த்துச் செய்தி மட்டும் அனுப்பியிருந்தான். கணவனின் இருதயம் , எண்ணங்கள் அவளுக்குத் தெரியும். அதனால்தான் அம்மா, அப்பா, மாமனார், மாமியார் பேச்சுக்கும் மீறி மகனுக்கு ரமணன் என்று பெயர் வைத்தாள்.

ரமணன் வளர்ந்தான். குப்புற விழுதல், தவழுதல், காலடி வைத்தல் ஆக எல்லாமே சுமதி மட்டுமே பார்த்து ரசிக்கும்படி நேர்ந்தது.

எங்கே போனான் கணவன்?

ஏதோ ஒரு பத்திரிகையில் புகைப்படத்துடன் வெளியான துணுக்குச் செய்தியின் அடிப்படையில் விசாரித்துக் கடிதம் எழுதியதற்காக ஓர் அர்த்த ராத்திரியில் வந்து போனான். பெயர் மாறியிருந்தது போல ஆளும் மாறிப் போயிருந்தான். சுமதிக்குப் பயம் பிடித்துக் கொண்டது. கணவனுக்குத் தான் தேவையில்லையா? கல்யாணமான புதிதில் காதருகில் சொன்ன ரகசியங்கள், ஆசை வார்த்தைகள் எல்லாமே அவனுக்கு மறந்து விட்டனவா?

கடிதங்கள் எழுதி எழுதி அலுத்துப் போய், கொடுத்த முகவரி சரிதானாவென்ற சந்தேகத்துடன், குழந்தையும் கையுமாகச் சென்னைக்குப் பயணமானாள். தன்னுடைய முன்னறிவிப்பின்படி கணவன் எழும்பூர் நிலையத்தில் காத்திருப்பான் என்று தான் எதிர்பார்த்தது பைத்தியக்காரத்தனம்தான் என்று நொந்து கொண்டாள். ஆட்டோ பிடித்து வீட்டுக்குச் சென்ற போது, ஏதோ அலுவலகத்திற்கு வந்துவிட்டாற் போலிருந்தது. குழந்தையுடன் வாசலில் திகைத்து நின்றதைப் பார்த்து உள்ளே இருந்து வந்தவன் கேட்டான், "நீங்க யாருங்க?"

சுமதிக்குத் தலை வெடித்துவிடும் போலிருந்தது. தன் வீட்டிலேயே தன்னை அறிமுகப் படுத்திக் கொள்ள வேண்டியிருக்கிறது.

"தெரிஞ்சவங்க... ஐயா வீட்டிலே இல்லையா?"

"விசாகப்பட்டினம் போயிருக்காங்க. அவுட்டோர் ஷூட்டிங். உங்களுக்கு என்ன வேணும்? சும்மா சொல்லுங்க, நான் அவரோட பெர்சனல் அசிஸ்டன்ட்டுதான்."

அயர்வு தோன்றிற்று. திகிலடைந்த சுமதியை பி. ஏ. இரக்கத்துடன் பார்த்தான்.

"சாயந்தரம் அம்மா வந்திருவாங்க; அவங்களைப் பாருங்க. ஏதாச்சும் உதவி செய்வாங்க."

சுமதிக்கு அடுத்த அதிர்ச்சி. தன்னைப் பிச்சைக்காரியாக்க, அப்படியொரு நினைப்பை உண்டாக்க வந்திருக்கும் இன்னொரு அம்மா யார்? கணவன் உண்மையாகவே தன்னை முற்றிலும் ஒதுக்கி விட்டானா?

மாலைக் கருக்கலில் விளக்கேற்றிய பிறகு 'புது அம்மா' பிரேமகுமாரி வந்தாள். 'என்ன வேணும்?' என்று சுமதியைக் கேட்டது உதாசீனமாக இருந்தாலும், விவரம் தெரிந்ததும் சுதாரித்துக் கொண்டு, இதமாகப் பேசினாள். கணவன் ஏற்கெனவே தன்னைப் பற்றி அவளிடம் சொல்லியிருக்க வேண்டுமென்று தோன்றிற்று. அவள் நடந்து கொண்ட தோரணையைப் பார்த்தால் தன்னுடைய உதவி ஏதோ தேவைப்படுமென்று தோன்றிற்று. அவள் பெரிய மீனுக்கு வலை வீசுகிறாள்!

விசாகப்பட்டினம் வேலை முடிந்து சரத் சந்திரன் திரும்பி வந்தான். சுமதி வந்ததை எதிர்பார்க்கவில்லையென்றாலும் வந்ததால் எந்தச் சலனமும் ஏற்பட்டதாகத் தெரியவில்லை. விஷயத்தை நேரடியாகவே சொல்லி விட்டான்.

"இதோ பார் சுமதி, இப்போதான் எனக்கு ஃபீல்டு பிக்கப் ஆகிக்கிட்டிருக்கு. குடும்பம், குழந்தை, குட்டின்னு கட்டுப்பட்டுக் கிடந்தா இந்த ஃபீல்டிலே முன்னேற முடியாது. அதனால்தான் அப்பா, அம்மாவைக் கூட ஊரிலேயே இருக்கச் சொல்லிட்டேன். இங்கே வரவே கூடாதுன்னும் கண்டிப்பாச் சொல்



# வியர்க்குருவினின்று நிவாரணம் பெற டால்கம் பவுடர் போதாது, நைஸில் வேண்டும்.

## நைஸில் உபயோகியுங்கள்

வியர்க்குருவினின்று விரைவில் நிவாரணம் பெறுங்கள்.






GLL-8606 R

நைஸில், மருந்துக்கலவையுள்ள பவுடர் ஆகும். வியர்க்குருவின் எந்தவிதத் தொல்லையிலிருந்தும் உடனடியாக நிவாரணம் அளிப்பதற்கென்றே விசேஷமுறையில் தயாரிக்கப்பட்டதாகும். டால்கம பவுடர்களைப் போலன்றி, பிரச்சினை மோசமாவ தனின்றும், பரவுவதனின்றும் எதிர்த்துக் காக்கிறது இது.

1. அளவுக்கு மீறிய வியர்வையைத் தடுக்கிறது.
2. வியர்வையை உறிஞ்சுகிறது. 3. துர்நாற்றம் ஏற்படுத்தும் கிருமிகளை அழிக்கிறது. 4. சருமத்திற்கு இதமளிக்கிறது.




ஓர் அஞ்சல் அட்டை விற்காமல் தபால் அலுவலகத்திலேயே இருந்தால் இலாகாவிற்கு லாபம் எவ்வளவு தெரியுமா? 63½ காசுகள். அதுவே ஓர் அஞ்சல் அட்டை விற்றால் இலாகாவிற்கு நஷ்டம் எவ்வளவு தெரியுமா? 48½ காசுகள். மக்களின் நலனைக் கருத்தில் கொண்டு மத்திய அரசு இதைப் பொறுத்துக் கொள்கிறது.

—கி. எழில்.

விட்டேன். அதேதான் உனக்கும். மலையாளப் படங்களிலே சான்ஸ் வந்துக்கிட்டிருக்கு. அதுக்கு அனுசரணையாத்தான் பிரேமகுமாரியைக் கல்யாணம் பண்ணிக்கிட்டதா நியூஸ் விட்டிருக்கேன். இதெல்லாம் இங்கே சகஜம். இது அவளுக்கும் தெரியும்.

சுமதி என்ன பேசுவதென்று தெரியாமல் விக்கித்து நின்றாள்.

"நீ ஊரிலே இருக்கிறதுதான் நல்லது. உன்னாலே இதையெல்லாம் ஜீரணிக்க முடியாது. நீ என்னோட பெண்டாட்டின்னு சொல்லாம இருக்கிறது உனக்குத்தான் நல்லது. மாதா மாதம் உனக்கு ஏதாச்சும் பணம் அனுப்பிச்சுடறேன்."

"ஜீவனாம்சம்னு சொல்றீங்களா?"

சரத்சந்திரன் இதை எதிர்பார்க்கவில்லை. அவளுக்குள் ஏதோ நடந்து கொண்டிருக்கிறது என்பதை மட்டும் புரிந்து கொண்டான். அவனும் தாழ்ந்து போகத் தயாராக இல்லை.

"அப்படித்தான் வச்சிக்கோயேன். இதமாச் சொல்றேன். இதைக் கோர்ட் மூலமாத்தான் சொல்ல வைக்கணும்னா அது உன் இஷ்டம். உனக்குத்தான் அது கேவலமே தவிர. இந்த ஃபீல்டிலே எனக்கு இன்னும் பிரபலமாகும். பத்திரிகைக்காரங்களுக்கும் நல்ல தீனி கிடைக்கும். இதைச் சொல்றதிலே எனக்குக் கூச்சம் கிடையாது. அப்புறம் உன் இஷ்டம்."

பணம், பங்களா, கார்... எல்லாமே கொட்டிக் கொடுக்க சரத்சந்திரன் தயார்தான். வாழ்வதற்குப் பாதுகாப்புக் கொடுக்கத் தயார்தான். ஆனால் கணவனாக இயங்கி, தான் மனைவியாகப் பொறுப்பேற்று, அவனுடைய சுகதுக்கங்களில் பங்கு கொள்ளும் வாய்ப்புத் தர அவன் தயாராக இல்லை. கூண்டுக்குள்ளே அவள் வாழ வேண்டும்... ஆண்டுக் கணக்கில் அவனுடைய அன்புக் குரலுக்காக அவள் ஏமாளியாகக் காத்திருக்க வேண்டும்!

அவள் விரும்பி வந்த வாழ்க்கை அதுவல்ல. தனக்கும் வாழத் தெரியும். நிரூபிக்க வேண்டும்.

அதனாலேயே உறவினர்களை, நண்பர்களை உதறித் தள்ளிவிட்டு, அவர்களுடைய இரக்கம், பச்சாதாபம் மாசுபடுத்தாத தொலை தூரம் தாண்டி இங்கு வந்தாயிற்று. தையல் தொழில்... அதை அஸ்திவாரமாகக் கொண்டு மேல் படிப்பு. நல்ல ஆசிரியை என்றும் பெயர் வாங்கியாயிற்று. இனி தன் வாழ்க்கையில் மீந்திருப்பதுதான் என்ன?"

வெளியில் கார் நின்ற ஓசையில் கனவுகள் கலைந்தன.

சரத்சந்திரன்.

அருகில் ரமணன்.

"மம்மி, இவங்க கையாலே இன்னைக்குப் பரிசு வாங்கினேன். நம்ம வீட்டுக்கு அவசியம் வரணும்னு வந்திருக்காங்க!"

ரமணி உற்சாகமாகச் சுமதியை ஒதுங்கச் செய்துவிட்டு, நாற்காலியைச் சரி செய்து, "உட்காருங்க சார்!" என்றான்.

சரத் உட்கார்ந்தான். சுமதி உள்ளே சென்று தனிமைப்படுத்திக் கொண்டாள்.

இந்த வருகைக்கு என்ன பொருள்?

"மம்மி, வந்து பேசிக்கிட்டிருங்க, நான் ஏதாச்சும் கூல்டிரிங்க்ஸ் வாங்கி வந்திடறேன். நேரமாச்சுன்னா கூட்டம் கூடிடும். அப்புறம் ஸ்டேஷனுக்கு லேட்டாயிடும்."

அவனுள் குதியாட்டம். இந்தத் தெருவில் நடப்பது இதுவே கடைசியாகக் கூட இருக்கலாம்!

திரும்பி வந்தபோது கைநிறையப் பொட்டலங்கள். வாசலில் கார் இல்லை. அம்மா மட்டும் இருந்தாள்.

"அவர் கிளம்பிப் போயிட்டாராம்மா?"

"ம்..."

"உன்கிட்டப் பெர்மிஷன் வாங்கிட்டாராம்மா! அவர் என்னை மெட்ராசுக்கு வரச் சொல்றாரும்மா... என்னைக் கதாநாயகனா நடிக்கச் சொல்றாரு..."

"ம்..."

"உன்கிட்ட கேட்டுட்டு நிச்சயமா வர்றதாச் சொன்னேன். அந்த மாதிரி பதில் சொன்னதே அவருக்கு ரொம்பப் பிடிச்சுப் போச்சும்மா. மொதல்லேயே கதாநாயகனாச் சான்ஸ் கெடைச்சா பெரிய அதிர்ஷ்டமில்லையாம்மா?"

சுமதி தழுதழுத்தாள். கண்களில் நீர் மறைத்தது. மகனின் பக்கம் அநாதரவாகப் பார்த்தாள்.

"ரமணா, அவர் உன்னைப் பெத்த அப்பா.. அந்தச் சங்கதி தெரியுமா உனக்கு?"

திக்கென்றது. அவருடைய அந்தரங்க வாழ்க்கை, குடும்ப வாழ்க்கை பத்திரிகைகளில் தாறுமாறாக விளம்பரமானதே... அந்த அவர்... தன்னுடைய...

"உனக்கு இறக்கை முளைச்சாச்சு. உன் இஷ்டம். போகணும்னாப் போகலாம். ஆனா உனக்கு ஒண்ணு சொல்லணும். அது என் கடமை. கேட்ட பிறகு உன் இஷ்டம் போல் செய். அவரு ஊருக்கெல்லாம் கதாநாயகன் தான்; ஆனா எனக்கு மட்டும் வில்லன்... என் வாழ்க்கையைச் சூறையாடிய வில்லன்! இப்போது என் மகனைக் கடத்திக்கிட்டுப் போக வந்திருக்காரு."

அவளுக்குப் பாரத்தை இறக்கி வைத்தது போல் இருந்தது. முகத்தைக் கழுவிக் கொண்டாள். கலைந்த கூந்தலைச் சரி செய்து கொண்டாள். இலேசாகப் பறப்பது போலிருந்தது.

அவன் மீண்டும் ஹாலுக்கு வந்தபோது அந்த போட்டோ அங்கில்லை!

# நல்ல வளர்ச்சி
# போர்ன்விடா பயிற்சி!




அன்னையர், அறிவர்: காட்பரீஸ் போர்ன்விடா கோகோ, மால்ட், பால் மற்றும் அசல் சீனியின் ஊட்ட நலன்களைக் கொண்டது. போர்ன்விடா குழந்தைகள் மிக விரும்பும் அத் தனிச் சுவையை பாலின் குணத்துடன் அளிக்கிறது.

தினமும் போர்ன்விடா அளிக்கப்படும் குழந்தைகள் வேலையிலும் விளையாட்டிலும் கூர்மையோடிருக்கிறார்கள். அது அவர்களுக்கு ஆரோக்கியத்தையும் சுறுசுறுப்பையும் அளிக்கிறது. அவர்களுடைய வளர்ச்சிக்கு எல்லா வகையிலும் நலன் அளிக்கிறது.

அதன் தனிச் சுவையுடன் இணைந்திட்ட இன்றைய வளர்ச்சி.

**காட்பரீஸ்**
**போர்ன்விடா**

# நிழல் யுத்தம்

## 21



"இதெல்லாம் சிம்பிளாக் கொண்டாடணும், சங்கரா. நீ இன்னும் பத்தாம் பசலியாவே இருக்கே. சாஸ்திரி, நெருப்பு, பஞ்சபாத்திரம்னு காசு வேஸ்ட் பண்றே. சாயந்திரம் நாலு சிநேகிதாளைக் கூப்பிட்டோமா கேக் வெட்டினோமா தின்னமான்னு இருக்கிறதை விட்டுட்டு இலைபோட்டு வக்கணையாச் சோறு திங்கணும். அதுக்கு, ஏதாவது ஒரு சாக்கு. கலாஸல் வேஸ்ட். யாருக்கு இப்ப சாப்பிடத் தோணும் சொல்லு."

முரளி அரைஞாணைப் பையில் போட்டுக் கொண்டு தெருவில் இறங்கினான். அவனுக்கும் சாப்பிடத் தோன்றவில்லை.

'குழந்தைக்குச் சின்னக் காயம்னாகூட பெத்தவளுக்குப் பத்திண்டுதான் வரும்' — உள்ளே எவருடைய கோபக் குரலோ ஓடிற்று. ஆட்டோ பிடித்து அம்மா வீட்டிற்குப் போனான். வீடு பூட்டிக் கிடந்தது.

"மாமி இங்கே வரலையே!"

"கிளம்பிட்டா."

"இங்கே வரலையே. சாப்பிட்டாச்சோ?"

"ஆச்சு!"

'இலை போட்டு வக்கணையாச் சோறு திங்கணும். அதுக்கு ஏதாவது ஒரு சாக்கு.' ஆண்குரல் பொருமிற்று.

அம்மா எங்கே? மனசு பதறிற்று. மறுபடியும் அங்கே அந்த வீட்டிற்கே வந்து விட்டாளா?

"என்ன முரளி ஆயுஷ் ஹோமம் நன்னா நடந்துதா?" எதிரே இன்னொரு சாஸ்திரிகள் விசாரித்தார்.

"ஆச்சு சார்."

"என்ன மூஞ்சி நன்னாவேயில்லையே!"

"அம்மா கோபிச்சுண்டு கிளம்பிட்டா."

"தாயாரா? இப்ப சித்த முன்னாடி கோவில் வாசல்லே பார்த்தேனே...

ஓட்டமும் நடையுமாய்க் கோவிலுக்கு ஓடினான். சந்நிதி சந்நிதியாய்த் தேடினான். அம்மா இல்லை. வசந்த மண்டபம் அருகே/வெத்துப் பல்லக்கு அருகில் யாரோ படுத்துக் கொண்டிருந்தார்கள். படியேறி அருகில் போய்ப் பார்த்தான்.

அம்மா படுத்துக் கொண்டிருந்தாள்.

நெஞ்சு ரணமாயிற்று. அநாதை மாதிரி கிடக்கிறவளைப் பார்த்ததும் வாய் கோணி அழத் தோன்றிற்று. விம்மல் விம்மலாய் உள்ளே துக்கம் எழுந்தது. கண் கலங்கி ஜலம் கொப்புளித்தது.

"அம்மா...

அம்மா தலை நிமிர்ந்தாள். அழுது கொண்டிருக்கிறாள். முகம் சூம்பிப் போய் வெற்றுப் பார்வையுடன் மெல்ல எழுந்திருந்தாள்.

"அம்மா..."

"இங்கேதான் மாப்பிள்ளை அழைப்பு நடந்தது. எட்டு சவரன் நகையும் ஒரு வெள்ளி சந்தனப் பேலாவும் ஜரிகை வேட்டியும் ஜரிகைத் துண்டும் இங்கேதான் அப்பாவுக்குக் கொடுத்தா. அப்ப கார் இல்லை. சாரெட்டு. கல்யாணமான பிறகு அப்பாவும் நானும் இங்கே வந்து உட்காருவோம்." அம்மா அடிக்குரலில் பேசினாள்.

"எழுந்து வாம்மா."

"எங்கேடா?"

பதில் சொல்ல முடியவில்லை. 'எங்கேயாவது போயிடலாம் வா' என்று சொல்லத் தோன்றிற்று. சொல்லவில்லை.

"உன்னைப் புள்ளையாண்டிருந்தப்போவும் இங்கே வந்து உட்கார்ந்துண்டிருந்தோம். யாருக்கும் தெரியாமல் சிவப்பா இருக்கும் இரண்டு சர்க்கரை மிட்டாய் வாங்கிக் கொடுத்




தார் உங்கப்பா.'' விழிகளை விரித்து இரண்டு வலக்கை விரல்களை நீட்டினாள்.

''சரி வா, போகலாம்.''

''நான் போயிக்கறேன்.''

''இங்கே உட்கார்ந்து என்ன பண்ணப் போறே? கொண்டு போய் விட்டுடறேன், வா.''

''வேண்டாம்.''

''ஏம்மா?''

''இப்ப போனால் எல்லாரும் என்ன மாமி ஆச்சு? ஏன் சீக்கிரம் திரும்பிட்டேள்? ரெண்டு பவுன் அரைக் கொடி போறலை யான்னு கேப்பா. ஐயோ பாவம் மாமின்னு எதிர்க்க நின்னு வருத்தப்படுவா. எச்சில் படுவானேன். இங்கேயே இருந்துட்டுச் சாயந்தரமாப் போறேன்.''

''கோவில் பூட்ட மாட்டாளா?''

''திட்டி வாசல் திறந்திருக்கும். என்னை மாதிரி கிழம் கட்டைகளுக்குக் கோவில் மண்டபம்தான் கதின்னு தெரியும். சாத்த மாட்டா.''

''உன்னை யார் அரை மணியும் ஐம்பொன் தாலியும் கேட்டா, வந்தோம் போனோம்னு இல்லாம?''

''தப்புத்தான். அளவு சரியில்லே. சாஸ்திரிகள் வேறே விவரமில்லாத இறுக்கிப் போட்டுட்டார். குழந்தை ரொம்ப அழுதானேடா. பாபி.நான் மகா பாபி. எதுக்கும் கொடுத்து வைக்காத பாபி.''

முரளி முகம் பொத்திக் கொண்டு ஓவென்று அழுதான். கோவிலைச் சுத்தம் பண்ணுகிறவர்கள் பார்த்துக் கொண்டே போனார்கள்.

அம்மா முரளியின் முதுகைத் தடவி விட்டாள்.

''போறது... போனாப் போறது. போ. எழுந்து போய் மத்த வேலைகளைக் கவனி.''

''நீ வா.'' முரளி முகம் துடைத்துப் பேசினான்.

''இல்லே. நான் வர்ற மாதிரி இல்லே. இனி மறந்து கூட அந்த வீட்டு வாசல்படி மிதிக்க மாட்டேன்.''

''உன் போர்ஷனுக்குப் போகலாம் வா.''

''எதுக்கு...? நீ எதுக்கு? எனக்குப் போகத் தெரியும். நீ போ...''

''என்னையேன் இப்படிச் சாகடிக்கறே?''

''நானா...! நன்னாயிருக்கு. அடிக்கிறது யாருன்னு கூட நான் சொல்லித் தரணுமா? அரைக் கொடியை அறுத்தெறிஞ்ச இடத்துக்கு நான் வரணுமா? எனக்குச் சொல்லிக் கொடுத்தால் கூட அந்த நிஷ்டூரம் வராது. யார் வீட்டிலேயாவது இப்படி நடக்குமா? ஓதியிட்டதை வீசியெறிவாளா? பாம்பு சீறலைன்னா, பத்துப் பேர் வருவா... வாலைச் சுருட்டித் தரைல அடிக்க... சீறுதது என் தப்பு.

''சீற வேண்டியதுதானே?''

''இருபத்தெட்டு வயசுக்கு நான் வாழலே. இருபத்தேழு வயசுக்கு நீ வாழாது போகணு


அருள்வாக்கு

'ஈசுவரனைக் காட்டிலும் குரு பெரியவர்; ஈசுவர பக்தியைக் காட்டிலும் குரு பக்தி விசேஷம் என்கிறார்களே, ஏன்?' என்று கேட்டால், ஈசுவரனை யாரும் பார்க்கவில்லை. பிரத்தியக்ஷமாக நாம் பார்க்கக் கூடிய ஒரு மனிதர் எப்போதும் சுத்தமாய், ஞானம் உடையவராய், அசைவு இல்லாத சித்தம் உடையவராய் அப்பழுக்கு இல்லாமல் நமக்குக் கிடைத்து விட்டால் நாம் எந்த மனச்சாந்திக்காக ஈசுவரனிடத்தில் போகிறோமோ அந்த சாந்தி இவரிடம் பக்தி செலுத்தினாலே கிடைத்து விடுகிறது. அதனால்தான்,

''குருர் ப்ரஹ்மா குருர் விஷ்ணு: குருர் தேவோ மஹேச்வர:'' என்று சொல்லியிருக்கிறார்கள். இந்த ச்லோகத்தில் குருவுக்கும் பரமாத்மாவுக்கும் அபேதம் சொல்லியிருப்பது ஒரு விசேஷம். Incidental ஆக இதிலேயே இன்னொரு விசேஷம், இதில் விஷ்ணு, சிவன் இருவரையும் சொல்லியிருப்பதால் இந்த ச்லோகத்தைச் சொல்லி நாம் குரு வந்தனம் பண்ணினால் நமக்கு சிவ — விஷ்ணு அபேத பாவமும் உண்டாகிவிடும்.

ஈசுவரனுக்கு என்ன என்ன உத்தமமான குணங்கள் எல்லாம் இருக்கின்றனவோ அவை எல்லாம் இந்த குருவிடத்தில் இருக்கின்றன. இவர் சுத்தமானவர்; பொய் சொல்லாதவர்; வஞ்சனை தெரியாதவர்; இந்திரியங்களை எல்லாம் வென்றவர்; கருணை நிறைந்தவர்; மகா ஞானி. இவரைப் பிரத்தியக்ஷமாகப் பார்க்கிறோம். பகவானையோ பிரத்தியக்ஷத்தில் பார்க்க முடியவில்லை. ஆகவே குருவின் திருவடிகளைப் பற்றிக் கொண்டு பக்தி செய்ய ஆரம்பித்து விட்டால் ஈசுவர பக்தியினால் நமக்கு என்ன அனுகூலங்கள் உண்டாகின்றனவோ அத்தனையும் சுலபமாக உண்டாகிவிடும். அதனால் தான் குருபக்தி உயர்ந்தது என்று சொன்னார்கள்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

மாக்கும். சிறல் சண்டையாகி சண்டை பெரிசாகிப் பொண்டாட்டி புருஷனைப் பிரிச்சுட்டான்னு பேரு வரணுமாக்கும். எப்போ எந்தக் கூடு பிரிச்சேனோ எனக்குப் புருஷனும் தக்கலே. புள்ளையும் ஒட்டலே.''

முரளி எழுந்தான். கோவிலை விட்டு வெளியே நடந்தான். உள்ளே சின்னதாய் ஒரு கோப வித்து மூளைக்குள் பதியப்பட்டது. வீட்டு வாசற்படி ஏறத் துளிர் விட்டது. கோபம் சாதாரணத் தாவரம் இல்லை. அசுரத் தாவரம். நிமிஷத்துக்கு நூறு இலை விடும். ஒரு நாளைக்கு ஆயிரம் கிளை பரப்பும்.

''முரளி, நீ இன்னும் சாப்பிடலையே,'' சங்கரன் வெற்றிலையைத் தொடையில் துடைத்தபடியே, படியேறியவனைக் கேட்டார்.

பசியும் துக்கமும் முரளியைக் கலக்கிப் போட்டிருந்தன. பதில் பேசாது மாடிப் படியேறினான்.

''ஓய்... உன்னைத்தான் கேட்கிறேன்!'' கூட நண்பர்கள் இருந்த காரணத்தால் பதில் பேசாத மாப்பிள்ளையைக் கேலியாய்க் கூப்பிட, சங்கரன் அவசரப்பட்டார்.

முரளி திரும்பினான். உள்ளே துளிர் இலையாயிற்று. உயர்ந்து மேலும் சில துளிர்கள் எழுந்தன.

''வந்து சாப்பிடுப்பா. எல்லாம் கிடக்கச் சோத்து மேல் கோவப்படாதேயும்.''

முரளி பல் கடித்தான்.

''நீர் கொட்டிண்டாச்சல்ல. அதோட விடும். தின்னு முடிச்சிட்டுப் பந்தி விசாரனை. என்ன இப்ப...?''

''முரளி...!

''சரிதான் போய்யா.''

''பெரியவாளைத் தப்பாப் பேசப்படாது'' யாரோ வேகமாக எழுந்தார்கள்.

''செருப்புப் பிஞ்சிடும். எவனாவது குறுக்கே பேசினா.''

கூட்டம் சில்லென்று நின்றது.

''யாரு... யாரைப் பார்த்துப் பேசறே? மரியாதை தெரியாதவனே...'' அவமானப்பட்டவர் குரலை உயர்த்தி இரைய முரளி கீழிறங்கினான். வெற்றிலை பாக்குத் தட்டை எடுத்து வாசலில் வீசி எறிந்தான்.

''வீட்டு மாப்பிள்ளை, சோறு திங்கலே. அத்தனை பேரும் நக்கித் தின்னுட்டு என்னய்யா விசாரனை? மரியாதை சொல்லித் தராணுங்க...''

குரல் கேட்டு எச்சில் கையோடு லலிதா வாசற்பக்கம் வந்தாள். ''முரளி'' என்று அதட்டினாள்.

முரளிக்குள் இருந்த கோபச் செடி பனிச்சென்று நாலடி உயரம் எழுந்தது. ''ஆஹ்ஹா'' என்று பயங்கரமாய்க் கிளை பிரிந்து கூச்சல் போட்டது.

''முரளி, ப்ளீஸ் சாப்பிட வாங்கோ.''

''இன்னொரு தடவை பேர் சொன்னே.. பிடரியிலேயே அடிப்பேன்.'' முரளி பல் கடித்துச் சீறினான்.

''முரளி,'' சங்கரன் எழுந்து தோளில் கை



# ஜெய ஜெய சங்கர

# ஹர ஹர சங்கர

நம் நடமாடும் தெய்வம் காஞ்சி **ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள்** தமது திருமலை விஜயத்தின் போது தேச சுபிக்ஷத்திற்காக தியானம் செய்ததின் பலனாக நமக்கு நல்ல அருள்வாக்கு ஒன்றை அருளியுள்ளார். அதாவது தேசத்திலுள்ள தெய்வ பக்தியுடைய ஒவ்வொரு பிரஜையும், கீழ்க்காணும் இரண்டு வார்த்தைகளையும் தன் சொந்த மன அமைதிக்காகவும் தேச அமைதிக்காகவும் 108 முறை எழுதி அனுப்புமாறு பணிக்கிறார்.

**''சரணாகத ரக்ஷக''**

**''ஆபத்பாந்தவ''**

அனுப்ப வேண்டிய முகவரி:

**ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கர மடம்,**

**திருமலை, திருப்பதி (ஆந்திரப் பிரதேசம்)**

---

**குறிப்பு: இதை விஜயதசமிக்கு முன்னதாக அனுப்பவும்.**

---

**ஸ்ரீ வெங்கடேஸ்வர புக் ஸ்டால்,**

**பழவந்தாங்கல் ரயில் நிலையம்,**

**சென்னை — 600 114.**

**நியூ ஸ்ரீ பாலாஜி ஜெனரல் மர்ச்சண்ட்ஸ்**

**14 — A, ஸ்டேஷன் ரோடு,**

**தாம்பரம் சானடோரியம், சென்னை — 600 047.**

வைத்தார்.

''கையை எடுய்யா. ஒரு இழிக்கிற உத்தி யோகம் வாங்கிக் கொடுத்துட்டே! அதனால் கொத்தடிமையா நான் உனக்கு? யாரை முறைளிங்கறே?''

''தப்புத்தான். ப்ளீஸ் தப்புத்தான். தயவு செய்து சாப்பிட வாங்கோ. பசிக் கோபத் துலே பேச வேண்டாம்,'' சங்கரன் கைகூப் பினார்.

பெண்டுகள் வாசற்படியை நிறைத்து அடைத்துக் கொண்டார்கள். ஆண்கள் பதற் றத்துடன் எழுந்து நின்றார்கள்.

''ஏய்! நீ கொட்டிண்டது போறும். போய் எங்கம்மாளைக் கூட்டிண்டு வா.'' முரளி லலிதாவை நோக்கிக் கைநீட்டினான்.

லலிதா கையை உதறினாள். ''முடியாது'' என்று கத்தினாள்.

முரளி சரக்கென்று முன்னேறினான். இடதும் வலதுமாய் லலிதாவை அறைந் தான். தலைமயிரைக் கொத்தாய்ப் பிடித்துத் தரையில் இழுத்துப் போட்டான். எட்டி முகத்தில் உதைத்தான். தடுத்த சங்கரன் நெஞ்சில் கைவைத்துத் தள்ளினான். சங்கரன் நிலைகுலைந்து பின்னால் விழுந்தார்.

''யூ ப்ளடி... யாரைக் கை நீட்டி அடிக் கறே நீ...?'' லலிதா உதட்டில் ரத்தம் பொங்கச் சீறி எழுந்தாள்.

முரளி மறுபடியும் கையை ஓங்கினான். சங்கரன் தாவிப் பிடித்துக் கொண்டார்.

''அடிடா பார்க்கலாம். பொறுக்கி. பொம் பளை பதிலுக்கு அடிக்க மாட்டாள்னுதானே கை நீட்டறே? உம் மிடில் க்ளாஸ் எச்சில் புத்தியைக் காட்டறே. ஒண்டுக் குடித்தனத் துலே கக்கூஸுக்குச் சண்டை போடற ஜாதி தானே நீ. எத்தனை குளிப்பாட்டினாலும் பொறப்பு வாசனை காட்டிட்டியே.''

முரளி திமிறினான். லலிதா உள்ளே ஓடி னாள். அரிவாள் மனையுடன் வெளியே வந் தாள். இடதும் வலதுமாய் வீசினாள். ''வா, நான் ரெடி வா! பொம்பளை பதிலுக்கு அடிக்க மாட்டாள்னு பார்த்தியா? வெட்டி எறிஞ் சுட்டு ஜெயிலுக்குப் போவேன். யூ ஸ்கௌண்ட்ரல். ப்ளடி ராஸ்கல். பெரிய கோவம் இவருக்கு? ஆட்டம் காட்டறியா மை ஃபுட். ஐ ஸே மை ஃபுட்.''

கண்ணாடிப் பாத்திரம் அன்று விரிந்தது. பிறகு கையோடு வந்தது!

(தொடரும்)





## இடைக்காட்டூர் இளைஞரின் தார்மீகக் கோபம்!

''குடிநீர்ப் பிரச்னைக்காக எத்தனை தடவை முறையிடுவது? கோபம் தாங்காம மானா மதுரைக்குப் போய் தண்ணீர்ப் பானைகளைப் போட்டு உடைத்துப் போராட் டம் நடத்திப் பார்த்துவிட்டோம். ஒரு பயனு மில்லீங்க. இத்தனைக்கும் சிவகங்கை நகருக்கு இங்கிருந்துதான் குழாய் மூலம் குடிநீர் எடுத்துக் கொண்டு போகிறார்கள். குடிநீர் இருந்தும் அதை நிலத்திலிருந்து எடுத்து விநியோகிக்க அரசாங்கத்தால முடி யலே...'' என்றபடி கோபப்பட்டார் இடைக் காட்டூர் இளைஞரான ஹரிகிருஷ்ணன்.

நிலைமை அப்படித்தான் இருக்கிறது. இடைக்காட்டூரில் ஒரேயொரு அடிகுழாய் தான் போடப்பட்டிருக்கிறது என்பதால், அது போதவில்லை. அதனால் பெண்கள் சுமார் இரண்டு கி. மீ. தூரத்திலுள்ள முத்தனேந்தலுக்குக் குடங்களைத் தூக்கிக் கொண்டு வெயிலில் அலைகிறார்கள்.

''இதோ பாருங்க, நூற்றிருபது அடி ஆழத்திற்கு இரண்டாவதாக ஓர் அடி குழாய் போட்டும் ஒரு மாத காலமாகக் குழாய் பொருத்தப்படாததால் உபயோகிக்க முடியாமல் இருக்கிறது. இது மட்டும்தானா? வைகை ஆற்றுப் படுகையில் நாற்பதாயிரம் ரூபாய்ச் செலவில் ஒரு கிணறு தோண்டி னார்கள். அதற்கும் பிளாட்பாரம், உருளைகள் என்று எதுவும் போடாததால் அதையும் உப யோகிக்க முடியலீங்க... அப்புறம் பஸ் வசதி இல்லை. ஆஸ்பத்திரி இல்லை. லைப்ரரியும் இல்லை. இருந்த லைப்ரரியையும் மூடிவிட் டார்கள். ஆனால் அதற்கு வரி மட்டும் வசூலிக் கிறார்கள்... என்றார் ஊர்ப் பிரமுகரான சுலுவன்.

கடைசியில், ஓர் ஆறுதலாய்க் கூட்டிக் கொண்டு போய், ''இது இடைக்காட்டுச் சித்தர் வாழ்ந்த ஊருங்க. பதினெட்டுச் சித்தர்களில் ஒருவரான அவர் மறைஞ்ச இடம் இதுதாங்க'' என்று காட்டினார்கள்.

''அரசுச் சித்தரின் அலட்சியப் போக்கு நீடிக்கும் வரை உங்களுக்கு வேதாந்த மனப் பான்மைதான் கைகொடுக்கும்'' என்று நாமும் பதிலுக்கு ஆறுதல் கூறிவிட்டுப் பிரிந் தோம்!

— நமது நிருபர்

சா. வை. நாதன்

# சங்கிலித் திருடன்

இன்ஸ்பெக்டர் காளமேகம் தொய்ந்து போய் அமர்ந்திருந்தார். பல சிக்கலான வழக்குகளையெல்லாம் பொடிப் பொடியாக ஆக்கிய அவர் அந்த ஊருக்கு மாற்றலாகி வந்து ஒரு வாரம்தான் இருக்கும். பழகுவதற்கு இனிமையானவர். அவரிடம் அதிகார தோரணை அவ்வளவாகக் கிடையாது. 'இன்ஸ்பெக்டர் காளமேகம் விசாரிக்கப் போனால் குற்றவாளி ஓடிவந்து அவர் காலடியில் விழுந்து விடுவானே!' அப்படி ஒரு மதிப்பு அவருக்கு. அப்படிப்பட்டவரை அந்தச் சங்கிலித் திருடன் திக்குமுக்காட வைத்துவிட்டான். அவன் போக்கு விசித்திரமாகவே பட்டது அவருக்கு. அவனைக் கையும் களவுமாக மடக்கிப் பிடித்துக் கொண்டு வர வேண்டும். எப்படி? இதுதான் அவர் மூளையைப் புழுவாய்க் குடைந்து கொண்டிருந்தது.



"குட்மார்னிங், சார்!"

சப்-இன்ஸ்பெக்டர் ராம்தாஸ் சல்யூட் அடித்துவிட்டு மிடுக்காக நின்றார்.

"வாங்க... வாங்க... இப்பத்தான் உங்களை நினைச்சேன்" என்ற காளமேகம் நிமிர்ந்து



"இவர்தான், இந்தப் படத்துக்குப் பொதுஜனத் தொடர்பு அதிகாரி...!"

"அவர் என்ன பண்ணுவார்...?"

"படம் பார்க்க எப்படியாவது ஜனங்களை அழைச்சுக்கிட்டு வருவார்!"

— கரடிகுளம் ஜெயாபாரதிப்ரியா

---

உட்கார்ந்து கொண்டார்.

"எதுக்கு சார்?"

"அந்தச் சங்கிலித் திருடன் சமாசாரம் தான், ராம்தாஸ்! அவன் செய்யறது வேடிக்கையா இல்லே?"

"பின்னே என்ன சார்! பொம்பளைங்க கழுத்திலே கிடக்கிற சங்கிலியைத்தான் காலிப் பசங்க அறுத்துக்கிட்டு ஓடுவாங்க. இவன் என்னடான்னு ஆம்பளைங்க போட்டிருக்கிற மைனர் செயினை மட்டும்தான் திருடறான். அதுவும், காலை வேளையிலே, ஜனசந்தடி நிறைந்த பாலக்கரையிலே..."

"அவன் அதை எடுத்துக்கிட்டு ஓடலை பார்த்தீங்களா? செயினை நாலு பேருக்கு முன்னால் வாய்க்கால்லே தூக்கி எறிஞ்சுட்டுக் கூட்டத்தில் மாயமா மறைஞ்சு போயிடறான்!"

"ஏன் சார், அவன் அப்படிச் செய்யறான்?"

"அதானே மர்மமா இருக்கு! நாமதான் அவனை அரெஸ்ட் பண்ணி விசாரிக்கணும்."

"கரெக்ட் சார்! இதோட மூணு கம்ப்ளெயின்ட் வந்துடுச்சு. பேப்பரிலே கொட்டை எழுத்திலே போட்டு நம்ம மானத்தை வாங்கு வாங்குன்னு வாங்கறாங்க. கிண்டலா வேற எழுதுறாங்க."

"ஊர் வாயை மூடினாலும் மூடிடலாம். இந்தப் பிரஸ்காரன் வாயை அடைக்கவே முடியாது. நாம ஒண்ணு செய்யலாமா?"

"சொல்லுங்க சார்!"

"நாளைக்குக் காலையிலே ஐந்து மணிக்கெல்லாம் பாலக்கரை இறக்கத்துக்கு நேரா இருக்கிற கடைகிட்டே நீங்க மப்டியிலே வந்து நில்லுங்க. நானும் வந்துடறேன். அவனை எப்படியும் வளைச்சுப் பிடிச்சுடலாம். அப்பத்தான் நமக்கு நிம்மதி வரும்..."

"பிரமாதமான ஐடியா, சார்!"

மறுநாள் பொழுது புலரும் முன்பே ராம்தாஸ் குறிப்பிட்ட இடத்துக்கு வந்துவிட்டார். சற்றைக்கெல்லாம் காளமேகமும் அங்கு வந்து சேர்ந்தார். இருவரும் பொடி நடையில் போய்க் காப்பி அருந்திவிட்டுத் திரும்பி வந்தார்கள்.

லாரிகளிலிருந்தும், பஸ்களிலிருந்தும் மூட்டை மூட்டையாகக் காய்கறிகள் இறக்கப்பட்டன. தலைச் சுமையாகத் தூக்கி வந்த காய்கறிக் கூடைகளை ஆண்களும் பெண்களும் பாலக்கரை இறக்கத்தில் தரையில் பரப்பி வைத்தார்கள். வியாபாரம், சூடு பிடிக்கத் தொடங்கியது. பொழுதும் விடியலாயிற்று.

காளமேகமும், ராம்தாசும் பஸ் ஸ்டாண்டில் கண்களை மேயவிட்டபடி காத்திருந்தார்கள்.

அப்போது வடக்கே இருந்து, பாலத்தைக் கடந்து வந்த டவுன் பஸ் பொருமிக் கொண்டு நின்றது. கலர் முண்டா பனியன் அணிந்து, சிவப்பு வண்ணக் காசித் துண்டைத் தலையில் சுற்றியிருந்த ஒரு வாலிபன் அதிலிருந்து கீழே குதித்தான். பஸ்ஸின் பின் சீட்டுக்கடியில் துருத்திக் கொண்டிருந்த ஒரு பெரிய மூங்கில் கூடையை, படிக்கட்டில் ஒரு காலை மட்டும் ஊன்றியபடி, அசைத்து மெள்ள மெள்ள வெளியே இழுக்கலானான். கூடை நிறையப் பிஞ்சுக் கத்திரிக்காய்கள் பளபளத்தன. அப்போது —

ஓர் இளம் வயதுக்காரன் பஸ்ஸில் ஏறி அவன் அருகில் சென்றான். கண் இமைக்கும் நேரத்தில் அவன் அந்தக் கூடைக்காரன் கழுத்தில் அசைந் தாடிய பவுன் செயினை அறுத்துக் கையில் பிடித்தபடி வாய்க்கால்க் கரையை நோக்கி ஓட எத்தனித்தான்.

"டேய்... டேய்... திருட்டு நாயே!" என்று கூவியபடியே பாய்ந்து ஓடி அவனைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டார் ராம்தாஸ்.

காளமேகம் அந்தச் சங்கிலியைக் கைப்பற்றினார். அவன் கைகளைப் பிணைத்துக் கட்டினார்.

இதற்குள் அங்கு ஒரு கும்பல் சேர்ந்து விட்டது. ஆளுக்காள் ஏதேதோ பேச ஆரம்பித்தார்கள். ஒரு சிலர் அவனைப் புரட்டி எடுக்கத் துடித்தார்கள்.

அவர்களைத் தடுத்து நிறுத்திய காளமேகம், "போங்க... போங்க... மத்ததை நாங்க பார்த்துக்கிறோம்" என்று எச்சரித்து விட்டு அந்தக் காய்கறி வியாபாரியைக் கூப்பிட்டார்.

அவன் நடுங்கியபடி வந்து நின்றான்.

"இந்தா ஐயா! நீ எங்களோடு ஸ்டேஷனுக்கு வந்து ஒரு புகார் கொடுத்துட்டுப் போகணும். அப்புறம் நாங்க கூப்பிட்ட போது வந்தால் போதும். உங்கள்லே ரெண்டு பேர் வீட்டு விலாசத்தைக் கொடுத்துட்டுப் போங்க. சாட்சி சொல்லக் கூப்பிடுவோம். ராம்தாஸ்! அவனைக் கொண்டு வாங்க" என்ற காளமேகம் அவர்கள் பின்தொடர போலீஸ் ஸ்டேஷனை நோக்கி நடந்தார்.

அவர்கள் காவல் நிலையத்தை அடைந்தார்கள். சற்றைக்கெல்லாம் எல்லோருக்கும் டீ வந்தது. முதலில் அவன் அதைக் குடிக்க முன்வரவில்லை. காளமேகம் வற்புறுத்திய பிறகுதான் கிளாஸைக் கையிலெடுத்தான்.

சிறு பொழுது கழிந்தது. அவன் எதையோ வெறித்துப் பார்த்தபடி கைகளைக் கட்டிக்

கொண்டு நின்றிருந்தான். அவனை நோக்க நோக்கக் காளமேகத்தைப் பரிதாபம் சூழ்ந்து கொண்டது. அவன் கண்ணியமான வனுகவே காணப்பட்டான். குறுக்கு வழியில் செல்பவனுகத் தென்படவில்லை. விவரிக்க இயலாத ஒரு சோக உணர்வு அவனிடம் குடிகொண்டிருப்பது மட்டும் புலப்பட்டது. ஒருவேளை இப்படிப் பிடிபட்டதால் இருக்குமோ?

காளமேகம் தம் கடமையில் ஈடுபட்லானுர்.

''உன் பெயர் என்னப்பா?''

''ராமதுரைங்க.''

''விலாசம்.''

''33, ராமர் கோயில் தெரு, கருப்பூர்.''

''எந்தக் கருப்பூர்?''

''பாலக்கரை தாண்டி கிழக்கே போனுல் கருப்பூர் வரும்ங்க.''

''நீ ஏதாவது வேலை பார்க்கிருயா?''

''எஸ். எஸ். எல். ஸி. வரை படிச்சிருக்கேன், சார்! கிருஷ்ண விலாஸ் பஸ் சர்வீஸ் டிராஃபிக் செக்ஷன்லே ஒர்க்காக இருக்கிறேன்.''

''என்னப்பா இது? நீயோ ஒரு நல்ல பொஸிஷன்லே இருக்கே! பார்க்கறதுக்கும் நல்லவன் மாதிரி தெரியுது. பின்னே இப்படி ஒரு திருட்டுப் புத்தி எப்படி வந்தது?''

''சார்! நான் யோக்கியமானவன்தான். இதுவரை எந்தத் தப்புத் தண்டாவுக்கும் போகாதவன்தான். எங்க ஊருக்கு வந்து யாரை வேணுமானுலும் கேட்டுப் பாருங்க, அப்பப் புரியும்.''

''பின்னே ஏன் இப்படி சங்கிலி அறுத்தே?''

ராமதுரையின் தொண்டை வறண்டது. கண்களில் நீர் வழியத் தேம்பித் தேம்பி அழலானுன்.

''அழாதே, நிதானமா மேலே சொல்லு'' என்ருர் காளமேகம்.

''சார்! கொஞ்ச நாளாகவே என் மனசிலே ஒரு குரூர எண்ணம் புகுந்து பேயாட்டமாக் குதிக்குது. இப்போ நான், வேலைக்குக் கூடப் போறதில்லே.''

''ஏன்? எதுக்காக?''

''எங்க குடும்பமே சந்தியிலே நிக்குது சார். சந்தியிலே.''

''இதோ பார் ராமதுரை! பதரும விவரமாச் சொல்லு. உன் வாக்கு மூலம் உனக்குச் சாதகமாகக் கூட அமையலாம்.''

''அதைப் பத்தி எல்லாம் கவலேயில்லே, சார்! என் தங்கச்சி வாழ்க்கை சீர்குலேந்து போனதை நினைக்கறப்பதான் என் ரத்தம் உலே நீர் மாதிரி கொதிக்குது; வெறி வேற வருது.''

''அப்படி என்னதான் நடந்துட்டது?''

''எங்க குடும்பத்திலே நான்தான் மூத்த பிள்ளை. எனக்கு ஒரே தங்கச்சி. பெயர் மங்களம். பார்க்கிறதுக்கு லட்சணமா இருக்கும். அப்பா கிடையாது. அம்மா சீக்

காளி. மங்களத்தைச் செல்லமா வளர்த்தோம்.''

''...ம்...''

''மங்களத்துக்குக் கும்பலிங்கத்தை நிச்சயம் பண்ணினோம். அவன் எங்க மாமன் மகன்தான். சின்னதா ஒரு மாவுமில் வெச்சிருக்கான். கையிலே நாலு காசு கண்டு. இவ்வளவு இருந்தும், 'பணம்'னு வாயைப் பிளப்பான்; அல்பமா நடந்துக்குவான். கொஞ்சம் குடிப்பழக்கம் உண்டு.''

''அப்படிப்பட்டவனுக்கு மங்களத்தைக் கட்டிக் கொடுக்க ஏன் துணிஞ்சீங்க?''

''அங்கேதான் சார், விதி புகுந்து விளையாடி விட்டது. இன்னும் ரெண்டு மூணு இடங்களைப் பார்த்தோம். 'அதைக் கொடு, இதைக் கொண்டு வா'ன்னு பேரம் பேசினாங்க. நமக்குச் சரிப்பட்டு வரலே. கும்பலிங்கம் மங்களத்தின் அழகிலே மயங்கி வலிய வந்து பெண் கேட்டான். என் தங்கச்சிக்கும் அவனைக் கட்டிக் கொள்ள ஆசை. 'சரி... ஒண்ணுக்குள்ளே ஒண்ணு... போகப் போக ஒத்துப் போயிடும்'னு நம்பினோம். இங்கே தான் ஒரு தப்புப் பண்ணிட்டோம்.''

''என்னப்பா அது?''

''கல்யாணமெல்லாம் நல்லபடியாத்தான் நடந்துச்சு. அவனுக்கு ஒரு பவுன்லே மைனர்செயின்போடுறதாப்பேச்சு. அப்போ முடியலே. எப்படியோ சமாதானம் செஞ்சு பெண்ணை அவன் கூட அனுப்பிட்டோம்.''

''சரி...''

''அப்புறம்தான் வந்தது வினை. அவன் தன் அல்ப புத்தியைக் காட்ட ஆரம்பிச்சுட்டான். மங்களத்தை எங்க வீட்டுக்கு அடிக்கடி துரத்தி அடித்துச் செயினைக் கேட்டு நச்சரித்தான். இப்படியே ஒரு நாலு மாசம் ஓடிப் போச்சு.''

''கதை போலல்ல இருக்கு, ஊம்...''

''இன்னும் கேளுங்க சார்! ஒரு நாள் மங்களம்தலைவிரிகோலமாவந்து, 'அண்ணே! அவருக்கு மைனர் செயின் இப்பவே வேணுமாம். இல்லாட்டி நான் இங்கேயே தங்கிடணுமா'ன்னு அழுது புலம்பிச்சு. இந்த லட்சணத்திலே அது மூணு மாசம் முழுகாம வேற இருந்தது. 'கேவலம் ஒரு பவுன் சங்கிலிக்காக என் தங்கச்சி வாழ்வையே நாசமாக்கப் பார்க்கிறானே!'ன்னு குமுறினேன்.''

''அப்புறம் எப்படி முடிஞ்சது?''

''எல்லாம் சோகமா முடிஞ்சு போச்சு, சார்! நான் மங்களத்தைக் கூட்டிக்கிட்டுக் கும்பலிங்கம் வீட்டுக்குப் போனேன். அவன் நிதானத்தில் இல்லே. தாறுமாறாகப் பேசினான். 'தீபாவளி போனஸ் வந்ததும், கையிலே இருக்கிற பணத்தையும் போட்டு, எப்படியும் சங்கிலி வாங்கிக் கொடுத்துடறேன்'னு கெஞ்சினேன். அவன் மசியவில்லே. எப்பவும் பெண் கொடுத்தவன் தாழ்ந்தவன் தானேன்னு நினைக்கிறாங்க! நான் எல்லாத்தையும் சகிச்சுக்கிட்டேன்!'' என்று ராமதுரை மௌனமானான்.

''மேலே சொல்லப்பா. டயமாகிறது'' என்று காளமேகம் முடுக்கினார்.

''எங்க மங்களம் கும்பலிங்கம் காலைப் பிடிச்சுக்கிட்டு கதறினாள். அந்தக் கிராதகப் பயல் என்ன செஞ்சான் தெரியுமா? குடி போதையிலே எட்டி உதைச்சுத் தள்ளினான் அந்தப் பெண் தெய்வத்தை. அது வலி தாங்காம அலறிக்கிட்டு அடி வயித்தைப் பிடிச்சுக்கிட்டே தரையில் உருண்டு சுருண்டு படுத்துட்டா.''

''அடப்பாவமே!''

''நான் துடிதுடிச்சிப் போய் மங்களத்தை வெளியே தூக்கிக்கிட்டு வந்து, சைக்கிள் ரிக்ஷாவிலே சாய்ச்சு உட்கார வச்சு, பெரிய ஆஸ்பத்திரி வரைக்கும் கொண்டு வந்து சேர்த்தேன். அந்தப் படுபாவியும் கூடவே வந்தான். கரு கலைந்து போய்ச் சிக்கலாகி, நாலாம் நாள் காலையிலே என் தங்கச்சி பரலோகம் போயிட்டா, சார்!''

''போலீஸிலே புகார் கொடுத்தியா?''

''இல்லே, சார்!''

''ஏன்? எதனாலே?''

''என்னாலே அவனோட மோத முடியுமா, சார்! பசை உள்ளவன் கையிலேதானே சட்டம் ஒட்டிக்குது! 'மங்களம் நிலைப் படியிலே தடுக்கி விழுந்து பிள்ளை சிதைந்து போய் செத்துப் போயிட்டா'ன்னு கதை கட்டி விட்டுட்டான். ஊரும் நம்பிட்டது.''

''இதுக்கும், நீ மைனர் செயினை அறுக்கறதுக்கும் என்ன சம்பந்தம்?''

''சொல்றேன் சார்! நியாயமாய்ப் பெண் பிள்ளைகள்தானே பவுன் நகைகள் போட்டுக்கணும்? இந்தத் தடிப் பசங்களுக்குக் கழுத்திலே சங்கிலி, மணிக்கட்டிலே கடிகாரம் கோத்த செயின், விரல்லே மோதிரம், எல்லாம் எதுக்குன்னு கேட்கிறேன், அதுவும் இப்போ பவுன் விக்கிற விலையிலே! ஒருத்தனைப் பார்த்து இன்னொருத்தனும் அப்படிப் போட்டுக்கணும்னு ஆசைப்படறான்; பெண் வீட்டாரைக் கசக்கிப் பிழியறானுங்க. அதனாலேதான் கும்பலிங்கம் பயலும் அப்படிக் கேட்டுட்டான். இந்தப் பஞ்சை அண்ணனாலே அவன் வெறியை உடனடியாத் தணிக்க முடியலே. விளைவு... என் தங்கச்சி மண்ணோடு மண்ணாப் போயிட்டா. என்னைப் போல எவ்வளவு பேர் இப்படி அவதிப்படறாங்களோ தெரியலையே! கடவுளே! இது அடுக்குமா? மனுஷத் தன்மை வேண்டாமா? இந்த வெறியிலே தான் இதுவரை மூணு மைனர் செயின்களை அறுத்து வாய்க்கால்லே தூக்கி எறிஞ்சேன். இப்பக் கூட உங்க கழுத்திலே கிடக்கிற செயினை அறுத்துத் தூர எறிஞ்சுடணும்னு வெறி வருது. அவ்வளவு தூரத்துக்கு நான் பாதிக்கப்பட்டிருக்கேன், சார்!''

''ராமதுரை! நீ என்ன சொன்னாலும் சட்டம் உன்னைக் குற்றவாளிக் கூண்டில்தான் கொண்டு போய் நிறுத்தும். உன் நிலைமைக்கு என்னால் வருத்தப்படத்தான் முடியும். வேறு வழியில்லே...'' என்று உண்மையிலேயே அனுதாபப்பட்டார் காளமேகம்.

# பொன்னியின் செல்வன்

அமரர் கல்கி

## அத்தியாயம் 10
## அநிருத்தப் பிரமராயர்



ந்தக் கதையின் ஆரம்ப காலத்திலேயே நமக்கு நெருங்கிப் பழக்கமான ஆழ்வார்க்கடியான் நம்பியைக் கொஞ்ச காலமாக நாம் கவனியாது விட்டு விட்டோம். அதற்காக நேயர்களிடமும் நம்பியிடமும் மன்னிப்புக் கோருகிறோம். முக்கியமாக, நம்பியின் மன்னிப்பை இப்போது நாம் கோரியே தீர வேண்டும். ஏனெனில் ஆழ்வார்க்கடியான் இப்போது வெகு வெகு கோபமாயிருக்கிறான்! அவனுடைய முன் குடுமி இராமேசுவரக் கடற்கரையில் அடிக்கும் காற்றில் பறந்து கொண்டிருக்கிறது. அவனுடைய கைத்தடியோ தலைக்கு மேலே சுழன்று கொண்டிருக்கிறது. அவனைச் சுற்றி ஆதி சைவர்களும் வீர சைவர்களும் பலர் சூழ்ந்து கொண்டிருக்கிறார்கள். அவர்களுடைய ஆர்ப்பாட்டம் பலமாக இருப்பதால், ஆழ்வார்க்கடியானுடைய கதி யாதாகுமோ என்று நமக்குக் கொஞ்சம் கவலையாகவுமிருக்கிறது. எனினும் நம்பியின் நரசிம்மாவதாரத் தோற்றமும் அவனுடைய கைத்தடி சுழலும் வேகமும் அந்தக் கவலையைப் போக்குகின்றன.

வந்தியத்தேவனும் இளையபிராட்டியும் பேசியதை ஒட்டுக் கேட்ட ஆழ்வார்க்கடியான் பழையாறையிலிருந்து அன்றைய தினமே புறப்பட்டான். வாயு வேக மனோவேகமாகத் தென் திசையை நோக்கிச் சென்றான். வழியில் எங்கும் அவன் சைவ வைஷ்ணவச் சண்டையில் இறங்கவில்லை. காரியத்துக்குக் குந்தகம் வரக்கூடாதென்று மனத்தைக் கட்டுப்படுத்திக் கொண்டு வலுவில் வந்த சண்டைகளைக் கூட வேண்டாம் என்று ஒதுக்கித் தள்ளிவிட்டு, நடந்தான். மதுரையில் சிறிது நேரம் தங்கினான். அங்கு அவன் அறிய விரும்பிய செய்தியை விசாரித்து அறிந்து கொண்டு இராமேசுவரத்துக்குப் புறப்பட்டான்.

வந்தியத்தேவன் பூங்குழலியின் படகில் சென்று இலங்கைத் தீவில் இறங்கிய அதே நாள் மாலையில் ஆழ்வார்க்கடியான் நம்பி இராமேசுவரம் வந்து சேர்ந்து விட்டான்.



ந்தப் புண்ணிய பூமியை மிதித்த உடனே ஆழ்வார்க்கடியானுடைய மனத்தில் அத்தனை நாளும் அடங்கிக்கிடந்தவைஷ்

ணவ ஆர்வம் கரையை உடைத்துக் கொண்டு பொங்கி விட்டது. இராமேசுவரத் தீவில் எங்கெங்கும் மொய்த்துக் கொண்டிருந்த வீர சைவ பட்டர்கள் அந்த ஆர்வத்துக்குத் தூபம் போட்டு விட்டார்கள். அந்தப் புண்ணிய ஸ்தலத்துக்கு வரும் யாத்ரீகர்களுக்கு வழிகாட்டி அழைத்துச் சென்று பற்பல தீர்த்தங்களிலும் ஸ்நானம் பண்ணி வைப்பதும், ஆலயத்தில் மூர்த்தி தரிசனம் செய்து வைப்பதும், அந்தந்தத் தீர்த்தம் — மூர்த்தி விசேஷங்களை எடுத்துச் சொல்லுவதுமே அவர்களுடைய அலுவல்கள். எனவே, புதிய யாத்ரீகர்களைக் கண்டதும் பட்டர்கள் பலர் சென்று சூழ்ந்து கொள்வார்கள். அவ்விதமே ஆழ்வார்க்கடியானையும் சுற்றி மொய்த்துக் கொண்டார்கள்!

''அப்பனே! வா! வா! இந்த ஸ்தலத்திலுள்ள அறுபத்து நான்கு தீர்த்தங்களில் ஸ்நானம் செய்து உன் தேகத்தில் தரித்திருக்கும் வைஷ்ணவ பாஷாண்ட சின்னங்களைக் கழுவித் துடைத்துக் கொள்! இராமரின் பிரம்மஹத்தி தோஷத்தைப் போக்கிய ஸ்தலம் அல்லவா இது? வைஷ்ணவ பாஷாண்ட மதச் சின்னங்களை நீ அணிந்ததினால் ஏற்பட்ட பாவங்களையும் போக்கிக் கொள்ளலாம்!'' என்று ஒரு பட்டர் விந்நியாசமாகப் பேசினார்.

இன்னொருவர் குறுக்கிட்டு, ''இராம தீர்த்தம், லக்ஷ்மண தீர்த்தம், ஆஞ்சநேய தீர்த்தம், சுக்ரீவ தீர்த்தம்' — இப்படி அறுபத்து நாலு தீர்த்தங்கள் இருக்கின்றன. ஒவ்வொருவரும் அந்தந்தத் தீர்த்தத்தில் தலைமுழுகி அவரவர்களுடைய தோஷத்தைப் போக்கிக் கொண்டார்கள். நீ என்னுடன் முதலில் ஆஞ்சநேய தீர்த்தத்துக்கு வா! வைஷ்ணவ சின்ன தோஷத்துக்குச் சரியான சங்கல்பம் பண்ணி வைக்கிறேன்!'' என்றார்.

மற்றொரு பட்டர் ''அப்பனே! இவர்கள் சொல்வதைக் கேளாதே! இராமர் இராவணனைக் கொன்ற பிரம்மஹத்தி தோஷத்தைப் போக்கிக் கொள்வதற்காகச் சமுத்திர மணலைப் பிடித்து வைத்துச் சிவலிங்கமாக்கிப் பூஜித்த இடத்துக்கு உன்னை நேராக அழைத்துப் போகிறேன்!'' என்றார்.



ஆழ்வார்க்கடியான் கண்ணில் தீப்பொறி பறக்க எல்லாரையும் ஒரு தடவை விழித்துப் பார்த்து, ''நிறுத்துங்கள் உங்கள் அபத்தப் பேச்சை! முதலில் நீங்கள் சொன்ன தீர்த்தங்களினால் உங்களுடைய நாவை அலம்பி உங்கள் பாவத்தைத் தீர்த்துக் கொள்ளுங்கள்!'' என்றான்.

''ஓஹோ! இராமன், லக்ஷ்மணன் என்றெல்லாம் சொன்னதனால் எங்களுக்குப் பாவம் வந்திருக்கும் என்று நினைக்கிறாயா? அப்படி ஒன்றுமில்லை. இந்த க்ஷேத்திரத்துக்குப் பெயரே இராமேச்சுவரம். இராமர் ஈசுவரனாகிய சிவபெருமானைப் பூஜை செய்து பாவத்தைப் போக்கிக் கொண்ட இடம். அத்துடன் இராமர் என்ற பெயரில் இருந்த தோஷமும் போய் விட்டது!'' என்றார் ஒரு வீர சைவ பட்டர்.

''ஓ, அஞ்ஞான சிரோன்மணிகளே! ஏன் இப்படித் தலைக்குத் தலை உளறுகிறீர்கள்? இந்த ஸ்தலப் பெயரின் அர்த்தம் இன்னதென்பதையே நீங்கள் தெரிந்து கொண்ட பாடில்லை!''

''நீதான் சொல்லேன், பார்ப்போம்!''

''பிரம்மாவினுடைய ஒரு தலையைப் பறித்ததினால் சிவனுக்குப் பிரம்மஹத்தி தோஷம் பிடித்து விட்டது. திருமாலின் பூரண அவதாரமாகிய இராமபிரானுடைய பாதம் பட்டுப் புனிதமான இந்த இடத்துக்குச் சிவன் வந்து அந்தப் பிரம்மஹத்தி தோஷத்தைப் போக்கிக் கொண்டார். இராமரை ஈசுவரன் பூஜித்த இடமானபடியால் இராமேசுவரம் என்ற பெயர் ஏற்பட்டது! தெரிந்து கொண்டீர்களா, மூடசிகாமணி பட்டர்களே!'' என்று ஆழ்வார்க்கடியான் கர்ஜித்தான்.

''யாரடா அவன் எங்களை மூட சிகாமணிகள் என்பது? அடே தடியா? நீ என்ன தலையில் கொம்பு முளைத்தவனா?'' என்று ஒரு பட்டர் சீறினார்.

''இல்லை, ஐயா பட்டரே! என் தலையிலே கொம்பு முளைக்கவில்லை;

கையிலேதான் இந்தக் கொம்பு இருக்கிறது! என்னை யார் என்று கேட்டீர் அல்லவா? சொல்லுகிறேன். திருக்குருகூரில் அவதரித்து வேதம் தமிழ் செய்த நம்மாழ்வாரின் அடியார்க்கு அடியான்!! மற்றவர்களை மண்டையில் நையப் புடைக்கும் கைத்தடியான்!'' என்று தடியைத் தூக்கிக் காட்டினான்.

''ஆழ்வார்க்கடியார்க் கடியானே! நீ ஏன் உன் தலையில் முன்புறத்தில் குடுமி வைத்திருக்கிறாய்? அதையும் மழுங்கச் சிரைத்து விட்டாயானால், உன் மண்டையின் உள்ளும் புறமும் ஒன்றாயிருக்கும்!'' என்றார் ஒரு சைவர்.

''பட்டர்களே! இந்தப் புண்ணிய க்ஷேத்திரத்திலே வந்து என் முன் குடுமியை எடுத்து விடுவதாகவே எண்ணியிருந்தேன். அதற்குள் நீங்களே ஞாபகப்படுத்தினீர்கள்.!.....''

''அடே! நாவிதர் தெருவுக்குச் சென்று ஒரு நாவிதனை அழைத்து வாருங்களடா! கத்தியை நன்றாய்த் தீட்டிக் கொண்டு வரச் சொல்லுங்கள்! இவனுடைய சிகையை ஆணி வேரோடு களைந்தெறியச் சொல்லலாம்!'' என்றார் ஒரு பட்டர்.

''இதற்கு நாவிதனைக் கூப்பிடுவானேன்? நாமே அந்தக் கைங்கர்யம் செய்து விடலாமே? நல்ல கூர்மையான கத்தியாகக் கொண்டு வாருங்கள்!'' என்றார் இன்னொரு சைவர்.

''கொஞ்சம் பொறுங்கள்; இன்னும் ஒரு விஷயம் பாக்கியிருக்கிறது. ஒரு காலத்தில் என் தலை முழுதும் சிகை அடர்த்தியாக இருந்தது. ஒரு சைவனுடைய மண்டையை உடைத்து விட்டு என் சிகையிலிருந்து ஒரு ரோமத்தை வாங்கி விடுவதென்று விரதம் எடுத்துக் கொண்டேன். அதன்படி முக்காலே அரைக்கால்வாசி சிகை தீர்ந்து விட்டது. இந்த ஊரில் என் முழு விரதத்தையும் நிறைவேற்றிக் கடலில் ஒரு முழுக்குப் போடப் போகிறேன். எங்கே, ஒவ்வொருவராக உங்களுடைய மண்டையைக் காட்டுங்கள், பார்க்கலாம்!'' என்று ஆழ்வார்க்கடியான் கைத்தடியை ஓங்கினான்.

''அடேடே! இந்த வைஷ்ணவன் என்ன துடுக்காகப் பேசுகிறான்?'' என்று சொன்னார் ஒருவர்.

''எங்கள் எல்லாருடைய மண்டையையும் உடைத்துவிடுவாயா? உன்னால் முடியுமா?'' என்று கூறினார் இன்னொருவர்.

''முடியாமலா முக்காலே அரைக்கால் பங்கு சிகையை எடுத்து விட்டிருக்கிறேன்?'' என்று கூறி ஆழ்வார்க்கடியான் தடியை வேகமாகச் சுழற்றத் தொடங்கினான்.

''அடியுங்கள்! பிடியுங்கள்! கட்டுங்கள்! வெட்டுங்கள்!'' என்று தலைக்குத் தலை கத்தினார்களே தவிர,



அக்கூட்டத்தில் யாரும் ஆழ்வார்க் கடியானுக்கு அருகில்நெருங்கவில்லை.

அச்சமயம் வெகு சமீபத்தில் எழுந்த ஒரு கோஷம் அவர்கள் எல்லா ருடைய கவனத்தையும் கவர்ந்தது.

''திரிபுவனச் சக்கரவர்த்தி சுந்தர சோழ பராந்தகரின் மகா மான்ய முதன் மந்திரி அநிருத்தப் பிரம்மாதி ராஜர் வருகிறார்! ப்ராக்! பராக்!''

எல்லாரும் திகைத்துப் போய்க் கோஷம் வந்த திசையை நோக்கினார் கள். ஆழ்வார்க்கடி யான் எல்லாரிலும் அதிகமாகத் திகைத் துத் தனது கைத்தடியைக் கக்கத்தில் வைத்துக் கொண்டு பார்த்தான்.

அவர்கள் நின்று சண்டையிட்ட இடம் இராமேசுவரக் கோயில் மதிலின் ஓரமான ஒரு முடுக்கு. அந்த முடுக்குத் திரும்பியதும் எதிரே விரிந்து பரந்த கடல். அக்கடலின் காட்சியோ கண்கொள்ளாத அற்புதக் காட்சியா யிருந்தது. பெரிய பெரிய மரக் கலங்கள், நாவாய்கள், சிறிய கப் பல்கள், படகுகள், ஓடங்கள், வள் ளங்கள், வத்தல்கள், கட்டுமரங்கள் ஆகியவை நெடுகிலும் வரிசை வரிசை யாகக் கண்ணுக்கெட்டிய தூரம் காணப்பட்டன. பாய்மரங்களிலி ருந்து படபடவென்று காற்றில் அடித் துக் கொண்டு பறந்த வெண்ணிறப் பாய்கள், கடலையும் வானத்தையும் தூரத்திலே திட்டுத் திட்டாகத் தோன் றிய பல தீவுகளையும் பெரும்பாலும் மறைத்துக் கொண்டிருந்தன.

மேலே சொன்னவாறு கட்டியங் கூறிக் கொண்டு காவல் வீரர்கள் முன் னும் பின்னும் தொடர, சோழ சாம் ராஜ்யத்தின் புகழ்பெற்ற முதன் மந்திரி அன்பில் அநிருத்தப் பிரம ராயர் ராஜ கம்பீரத்துடன் ஒரு பட கில் வந்து கொண்டிருந்தார். கரை யில், கோயில் மதில் ஓரமாக நடந்து கொண்டிருந்த சச்சரவை அவர் கவ னித்தார். கூட்டத்தின் நடுவில் கக்கத் தில் தடியுடன் பரம சாதுவைப் போல நின்ற ஆழ்வார்க்கடியானைக் கையி னால் சமிக்ஞைசெய்து அருகில் அழைத் தார். ஆழ்வார்க்கடியான் பயபக்தி யுடன் கையைக் கட்டிக் கொண்டு கடற்கரையோரம் சென்று நின்றான்.

''திருமலை! இது என்ன தெருக் கூத்து?'' என்றார் அநிருத்தர்.

''குருவே! எல்லாம் கபட நாடக சூத்திரதாரியான அந்தக் கண்ணனின் திருக்கூத்துதான்! என் கண்களில் காண்பதை நான் நம்புவதா, இல் லையா என்றே தெரியவில்லை. நான் காண்பது கனவா? அல்லது எல்லாம் வெறும் மாயையா?......''

''திருமலை! உன்னைப் பரம வைஷ் ணவன் என்று நினைத்தேன். எப் போது பிரபஞ்சத்தை மித்தை என்று சொல்லும் மாயாவாதியானாய்?''

''குருவே! பரம வைஷ்ணவ பரம் பரையில் அவதரித்த தாங்கள் சைவ சமயி ஆகும்போது நான் ஏன் மாயா வாதி ஆகக் கூடாது? என்னுடைய பெயரை மாற்றிக் கொண்டு ஸ்ரீ சங்கர பகவத் பாதாச்சார்யாரின் அடியார்க் கடியன் ஆகிவிடுகிறேன்......''

''பொறு! பொறு! நான் சைவ சமயி ஆனதாக யார் சொன்னது?''

''தங்கள் திருமேனியில் உள்ள சின் னங்கள் சொல்கின்றன!''

''ஆகா! திருமலை! நீ இன்னும் முன் போலவே இருக்கிறாய்! புறச் சின் னங்களுக்கே முக்கியம் கொடுக் கிறாய்! நெற்றியில் இடுகிற சந் தனத்தைச் சாய்த்து இட்டால் என்ன? நிமிர்த்து இட்டால் என்ன?''

''குருவே! நான் ஒன்றும் அறியா தவன்; எது முக்கியம், எது அமுக்கி யம் என்று அறியாதவன். தாங்கள் தான் என்னைத் தெளிவித்து ஆட் கொள்ள வேண்டும்.''

''எல்லாம் தெளிவிக்கிறேன். நான் தங்கும் இடத்துக்கு வந்து சேர்! அதோ கடலில் ஒரு சிறிய தீவு தெரி கிறது பார்த்தாயா? அங்கேயுள்ள மண்டபத்துக்கு வா!''

''குருவே! இதோ இந்தச் சண்டைக் காரச் சைவர்கள் என்னை வரவிட வேண் டுமே?'' என்று ஆழ்வார்க்கடியான் சொல்லிக் கையினால் அவர்களைச் சுட்டிக் காட்டினான்.

அதுவரை சும்மாயிருந்த வீரசைவர்

கள் உடனே நெருங்கி வந்தார்கள்.

"பிரம்மாதி ராஜரே! இந்த வைஷ்ணவன் எங்கள் மண்டைகளை உடைத்து விடுவானாம்! இவனைத் தக்கபடி தண்டிக்க வேண்டும்!" என்று ஒருவர் ஆரம்பித்தார். மற்றவர்கள் தலைக்குத்தலை பேசலானார்கள்.

"இவனுக்குத் தண்டனை நான் கொடுக்கிறேன். நீங்கள் போகலாம்" என்றார் அநிருத்தர்.

இதனால் அவர்கள் திருப்தி அடையவில்லை. "நாங்களே இவனுக்குத் தண்டனை கொடுக்கக் கூடாதா? இவனுடைய முன் குடுமியைச் சிரைத்து, இவனுடைய ஊர்த்வ சின்னங்களையெல்லாம் அழித்து, இவனைக் கிணற்றில் போட்டு முழுக்காட்டி....." என்று அடுக்கினார் ஒருவர்.

"என்ன சொன்னீர்கள்?" என்று ஆழ்வார்க்கடியான் கண்களில் தீ எழத் திரும்பி நோக்கினான்.

அநிருத்தப் பிரமராயர் அப்போது "பட்டர் மணிகளே! இவன் பெரிய முரடன். இவனைத் தண்டிக்க உங்களால் ஆகாது. நான் பார்த்துக்கொள்கிறேன்" என்றார்.

பிறகு தம்மைத் தொடர்ந்து வந்த படகில் இருந்த அகப்பரிவார வீரர்களைப் பார்த்து, "உங்களில் எட்டுப் பேர் இறங்கி இவனை நம் இடத்துக்குக் கொண்டு வாருங்கள்!" என்றார்.

அவ்வளவுதான். மறுகணம் வீரர்கள் எட்டுப் பேர் கரையில் குதித்தார்கள்; ஆழ்வார்க்கடியானைச் சூழ்ந்து கொண்டு நின்றார்கள்.

படகு மேலே சென்றது.

படைவீரர்கள் புடைசூழ ஆழ்வார்க்கடியானும் போனான்.

பட்டர்களும் மற்றவர்களும் அந்த வைஷ்ணவனுடைய முரட்டுத்தனத்தைக் குறித்துப் பலவாறு பேசிக்கொண்டு கலைந்து போனார்கள்.

## அத்தியாயம் 11
## தெரிஞ்ச கைக்கோளப் படை



ராமேசுவரப் பெருந்தீவையடுத்த சிறிய தீவுகளில் ஒன்றில், ஒரு பழைமையான மண்டபத்தில், அநிருத்தப் பிரம்மாதிராயர் கொலு வீற்றிருந்தார். அவருடைய அமைச்சர் வேலையை நடத்துவதற்குரிய சாதனங்கள் அவரைச் சூழ்ந்திருந்தன. கணக்கர்கள், ஓலை எழுதும் திருமந்திர நாயகர்கள், அகப்பரிவாரக் காவலர்கள் முதலியோர் அவரவர்களுடைய இடத்தில் ஆயத்தமாக இருந்தார்கள்.

அநிருத்தர் படகிலிருந்து இறங்கி வந்து அம்மண்டபத்தில் அமர்ந்து சிறிது நேரம் ஆனதும், தம்மைப் பார்க்க வந்திருந்தவர்களை அழைக்குமாறு கட்டளையிட்டார்.

ஐந்து பேர் முதலில் வந்தார்கள். அவர்களைப் பார்த்தால் செல்வச் செழிப்புள்ள வர்த்தகர்கள் என்று தோன்றியது.

ஒரு தட்டில் நவரத்தின மாலை ஒன்றை வைத்துச் சமர்ப்பித்தார்கள். அதை அநிருத்தப் பிரமராயர் வாங்கிக் கணக்கரிடம் கொடுத்து, "செம்பியன் மகாதேவியின் ஆலயத் திருப்பணிக்கு என்று எழுதி வைத்துக் கொள்க!" என்றார்.

பிறகு, வந்தவர்களைப் பார்த்து "நீங்கள் யார்?" என்று கேட்டார்.

"நானா தேச திசையாயிரத்து ஐந்நூற்றுவர்* சார்பில் நாங்கள் வந்திருக்கிறோம்" என்று அவர்களில் ஒருவர் கூறினார்.

"சந்தோஷம்; பாண்டிய நாட்டில் உங்களுடைய வாணிபம் செழிப்பாயிருக்கிறதல்லவா?"

"நாளுக்கு நாள் செழிப்படைந்து வருகிறது!"

"பாண்டிய நாட்டு மக்கள் என்ன

* இந்த நீண்ட தொடர் பெயர் கொண்ட வர்த்தகக் கூட்டத்தார் சோழப் பேரரசின் கீழ், கடல் கடந்த நாடுகளுடன் வாணிபம் நடத்தி வந்தார்கள்.

பேசிக் கொள்கிறார்கள்?''

''பாண்டிய வம்ச ஆட்சியைக் காட்டிலும் சோழ குல ஆட்சியே மேலானது என்று பேசிக் கொள் கிறார்கள். முக்கியமாக, இளவரசர் அருள்மொழி வர்மரின் வீர தயாளங்களைக் குறித்துச் சிலாகிக்கி றார்கள். இலங்கையில் நடப்பதெல்லாம் இந்தப் பக்கத்து மக்களிடையில் பரவியிருக்கிறது...''

''கீழ்க்கடல் நாடுகளுடன் உங்கள் கப்பல் வாணி பம் இப்போது எப்படியிருக்கிறது?''

''சுந்தர சோழச் சக்கரவர்த்தியின் ஆளுகையில் ஒரு குறைவும் இல்லை. சென்ற ஆண்டில் அனுப்பிய எங்கள் கப்பல்கள் எல்லாம் திரும்பி வந்து விட்



டன. ஒன்று கூடச் சேதமில்லை.''

''கடல் கொள்ளைக்காரர்களினால் தொல்லை ஒன்றுமில்லையே?''

''சென்ற ஆண்டில் இல்லை. மானக்கவாரத் தீவுக்கு அருகில் இருந்த கடற் கொள்ளைக்காரர்களை நம் சோழக் கப்பற் படை அழித்த பிறகு கீழைக் கடல்களில் கொள்ளை பயம் கிடையாது."

''நல்லது; நாம் கொடுத்தனுப்பிய ஓலை சம்பந்தமாக என்ன ஏற்பாடு செய்திருக்கிறீர்கள்?''

''கட்டளைப்படி செய்





## பாராட்டுக்குரிய நகரசபை!

"என்னங்க, சிவகங்கை, மாவட்டத் தலைநகராகி விட்டது. பார்த்தால் அப்படித் தெரியவே இல்லை. ஒரு பெரிய கிராமம் போல்தான் தெரிகிறது. வளர்ச்சிக்கு என்ன செய்யப் போகிறீர்கள்?" என்று சிவகங்கை நகரசபைத் தலைவர் சொ. லெ. சாத்தையாவைக் கேட்டோம்.

"முதலில் குடிநீர்ப் பிரச்னையைச் சமாளிக்கும் திட்டம்தாங்க. இப்போது சிவகங்கைக்கு இடைக்காட்டூரிலேர்ந்து குடிநீர் கொண்டு வருகிறோம். முப்பத்தையாயிரம் ஜனத்தொகைக்கு இது போதும். ஆனால், இப்போது கட்டிக் கொண்டிருக்கிற கலெக்டரேட் காம்ப்ளக்ஸ் கட்டி முடிக்கப்பட்டு விட்டால் ஜனத்தொகை அதிகமாயிடும். அப்போது சமாளிக்க வேண்டுமே? அதற்காகத்தான் மறுபடியும் இடைக்காட்டூரிலிருந்து வரும் திட்டத்தையே விரிவுபடுத்த ஒரு கோடி ரூபாய் செலவில் ஒரு திட்டம் தீட்டியிருக்கிறோம்!" என்றார் சாத்தையா.

மாநிலத் தலைநகரான சென்னையில் கூட, முன் யோசனையான திட்டங்களைத் தீட்டாமல் வறட்சி வரும் போதுதான் நிர்வாகம் அலறியடித்துக் கொண்டு லபோ திபோ என்று அடித்துக் கொள்கிறது. இந்நிலையில், வருமுன்னர்க் காக்கும் சிவகங்கை நகர சபை நிர்வாகம் பாராட்டுக்குரியதுதான் என்பதில் சந்தேகமில்லை.

— நமது நிருபர்

---

திருக்கிறோம். இலங்கைச் சைன்யத்துக்கு அனுப்ப ஆயிரம் மூட்டை அரிசியும், ஐந்நூறு மூட்டை சோளமும், நூறு மூ ட் டை துவரம் பருப்பும் இந்த இராமேசுவரத் தீவில் கொண்டு வைத்திருக்கிறோம். இலங்கைக்கு அனுப்பி வைக்க ஏற்பாடு செய்ய வேணும்."

"உங்களுடைய கப்பல்களிலேயே ஏற்றி அனுப்ப முடியுமா?"

"கட்டளையிட்டால் செய்கிறோம். இலங்கை யுத்தம் எப்போது முடியும் என்று தெரிந்து கொள்ள விரும்புகிறோம்."

"ஆ! அது யாருக்குத் தெரியும்? உங்களுடைய வர்த்தக சபைக்கு ஜோதிடக்காரன் இருக்கிறான் அல்லவா? அவனைக் கேட்டு எனக்கும் சொல்லுங்கள்!"

"பிரம்ம ராஜரே! எங்கள் ஜோதிடக்காரன் சொல்வதையெல்லாம் எங்களாலேயே நம்ப முடியவில்லை."

"அப்படி அவன் என்ன சொல்லுகிறான்?"

"இளவரசர் அருள்மொழி வர்மர் போகுமிடமெல்லாம் வெற்றிதான் என்று சொல்லுகிறான். அவருடைய ஆட்சியில் சோழக் கப்பல் படை கடல் கடந்த தேசங்களுக்கெல்லாம் சென்று வெற்றி கொள்ளும் என்று சொல்லுகிறான். தூரத்தில் உள்ள தேசங்கள் பலவற்றில் புலிக்கொடி பறக்கும் என்று சொல்லுகிறான்."

"அப்படியானால் உங்கள் பாடு கொண்டாட்டம்தான்!"

"ஆம்; எங்கள் கடல் வர்த்தகம் மேலும் செழித்து ஓங்கும் என்றும் சொல்லியிருக்கிறான்."

"மிகவும் சந்தோஷம். ஸ்ரீ ரங்கநாதருடைய அருள் இருந்தால் அப்படியே நடக்கும். இலங்கையில் யுத்தம் நடக்கும் வரையில் மாதம் ஒரு தடவை நீங்கள் இப்படியே அரிசி முதலியவை அனுப்பி வர வேண்டும். போய் வாருங்கள்."

"அப்படியே செய்கிறோம், போய் வருகிறோம்."

ஐந்நூற்றுவர் சபையின் பிரதிநிதிகள் போன பிறகு, ஒரு காவலன் வந்து, "தெரிஞ்ச கைக்கோளப் படைச்சேனாதிபதிகள் காத்திருக்கிறார்கள். பார்க்க விரும்புகிறார்கள்" என்று சொன்னான்.

"வரச் சொல்லு!" என்றார் முதல் அமைச்சர் அநிருத்தர்.

மூன்று கம்பீர புருஷர்கள் பிரவேசித்தார்கள். அவர்களுடைய முகங்களிலும் தோற்றத்திலும் வீர லக்ஷ்மி வாசம் செய்தாள். அஞ்சா நெஞ்சம் படைத்த ஆண்டையாளர் என்று பார்த்தவுடனே தெரிந்தது.

"சுந்தர சோழ தெரிஞ்ச கைக்கோ

ளப் படையார்* தானே?'' என்று அநிருத்தர் கேட்டார்.

''ஆம், ஐயா! ஆனால் அப்படிச் சொல்லிக் கொள்ளவும் எங்களுக்கு வெட்கமாயிருக்கிறது.''

''அது, ஏன்?''

''சக்கரவர்த்தியின் சோற்றைத் தின்று கொண்டு ஆறு மாத காலமாக இங்கே வீணில் காலங்கழித்துக் கொண்டிருக்கிறோம்.''

''உங்கள் படையில் எத்தனை கை? எத்தனை வீரர்கள்?''

''எங்கள் சேனை மூன்று கைமா சேனை. இவர் இடங்கை சேனைத் தலைவர்; இவர் வலங்கை சேனைத் தலைவர்; நான் நடு விற்கைப் படைத் தலைவன். ஒவ்வொரு கையிலும் இரண்டாயிரம் வீரர்கள். எல்லோரும் சாப்பிட்டுத் தூங்கிக் கொண்டிருக்கிறோம்.. வேலும் ஈட்டியும் வாளும் தோளும் சோம்பிக் கிடக்கின்றன. போர்த் தொழிலே எங்களுக்கு மறந்து விடும் போலிருக்கிறது.''

''உங்களுடைய கோரிக்கை என்ன?''

''எங்களை இலங்கைக்கு அனுப்பி வைக்கக் கோருகிறோம். இளவரசர் அருள்மொழி வர்மர் மாதண்ட நாயகராயிருக்கும் சைன்யத்திலே சேர்ந்து யுத்தம் செய்ய விரும்புகிறோம்.''

''ஆகட்டும்; தஞ்சைக்குப் போனதும் சக்கரவர்த்தியின் சம்மதம் கேட்டு விட்டு உங்களுக்கு அறிவிக்கிறேன்.''

''பிரம்மராஜரே! அதற்குள்ளே இலங்கை யுத்தம் முடிந்து விட்டால்?''

''அந்தப் பயம் உங்களுக்கு வேண்டாம். இலங்கை யுத்தம் இப்போதைக்கு முடியும் என்பதாகத் தோன்றவில்லை.''

''ஈழத்துச்சேனவீரர்கள் அவ்வளவு பொல்லாதவர்களா? எங்களை அங்கே அனுப்பி வையுங்கள். ஒரு கை பார்க்கிறோம்!......''

''ஒரு கை என்ன? நீங்கள் மூன்று கையும் பார்ப்பீர்கள். தெரிஞ்ச கைக் கோளரின் மூன்று கை மாசேனை யுத்த களத்தில் புகுந்து விட்டால் பகைவர்களின் பாடு என்னவென்று சொல்ல வேண்டுமோ? நடுவிற்கை வீரர்கள் பகைவர் படையின் நடுவில் புகுந்து தாக்குவீர்கள். அதே சமயத்தில் இடங்கை வீரர்கள் இடப்புறத்திலும் வலங்கை வீரர்கள் வலப்புறத்திலும் சென்று இடி விழுவது போலப் பகைவர்கள் மீது விழுந்து தாக்குவீர்கள்...''

''அப்படித் தாக்கித்தான் பாண்டிய சைன்யத்தை நிர்மூலம் செய்தோம்; சேரர்களை முறியடித்தோம்.''

''பாண்டியர்களும் சேரர்களும் போர்க்களத்தில் எதிர்த்து நின்றார்கள்; அதனால் அவர்களைத் தாக்கி முறியடித்தீர்கள். பகை வீரர்களை முதலில் கண்ணால் பார்த்தால்தானே அவர்களை நீங்கள் ஒரு கையும் பார்க்கலாம், மூன்று கையும் பார்க்கலாம்?''

''இராவணர் காலத்து அசுரர்களைப் போல் இந்தக் காலத்து இலங்கை வீரர்களும் மாயாவிகளாகி விட்டார்களா? மேக மண்டலத்தில் மறைந்து நின்று போரிடுகிறார்களா?''

''மாயாவிகளாய் மறைந்துதான் விட்டார்கள்; ஆனால் போர் செய்யவில்லை. போரிட்டால்தான் இருக்குமிடத்தைக் கண்டுபிடித்து விடலாமே? இலங்கை அரசன் மகிந்தனையும் காணவில்லை; அவனுடைய சேனை வீரர்களையும் காணவில்லை. காடுகளிலே, மலைகளிலே எங்கே போய் ஒளிந்து கொண்டார்களோ, தெரியவில்லை. ஆகையால், ஆறு மாதமாக இலங்கையில் யுத்தமே நடைபெறவில்லை. உங்களையும் அங்கே அனுப்பி என்ன செய்கிறது?''

''மகா மந்திரி! எங்களை அனுப்பிப் பாருங்கள்! மகிந்தனும் அவனுடைய வீரர்களும் காடு மலைகளிலே ஒளிந்திருக்கட்டும்; அல்லது மேக

---

* இன்று தமிழ்நாட்டில் கைத்தறி நெசவுத் தொழிலில் ஈடுபட்டு நூலின்றித் திண்டாடும் கைக்கோள வகுப்பார் சோழப் பேரரசின் காலத்தில் புகழ்பெற்ற வீரவகுப்பாராயிருந்தனர். அவர்களில் பொறுக்கி எடுத்த வீரர்களைக் கொண்டு சோழ சக்கரவர்த்தி 'அகப்பரிவாரப் படை'யை அமைத்துக் கொள்வது வழக்கம். அப்படிப் பொறுக்கி எடுக்கப்பட்ட படைக்குத் 'தெரிஞ்ச கைக்கோளர் படை' என்ற பெயர் வழங்கியது. அந்தச் சக்கரவர்த்தி அல்லது அரசரின் பெயரையும் படைப் பெயருக்கு முன்னால் சேர்த்துக் கொள்வதுண்டு.

மண்டலத்திலே ஒளிந்திருக்கட்டும். அவர்களைக் கைப்பிடியாகப் பிடித்துக் கொண்டு வந்து இளவரசரின் காலடியில் சேர்க்கிறோம். அப்படிச் சேர்க்காவிட்டால், 'தெரிஞ்ச கைக்கோளர் படை' என்ற பெயரை மாற்றிக் கொண்டு, 'வேளாளரின் அடிமைப் படை' என்ற பட்டயத்தைப் பெற்றுக் கொள்கிறோம்!''

''வேண்டாம்; வேண்டாம்! அப்படி ஒன்றும் இப்போது சபதம் செய்ய வேண்டாம்! தெரிஞ்ச கைக்கோளர் படையின் வீர பராக்கிரமம் இந்த ஜம்புத்வீபத்தில் யாருக்குத் தெரியாது? தஞ்சாவூர் சென்றதும் சக்கரவர்த்தியைக் கேட்டுக் கொண்டு உங்களுக்குக் கட்டளை அனுப்புகிறேன். அதுவரை பொறுமையாக இருங்கள். பாண்டிய நாட்டில் பகைவர்களை அடக்கி அமைதியை நிலைநாட்டி வாருங்கள்!''

''மகாமந்திரி! பாண்டிய நாட்டில் இனி அடக்குவதற்குப் பகைவர் யாரும் இல்லை. குடிமக்கள் யுத்தம் நின்றது பற்றி மகிழ்ச்சி அடைந்திருக்கிறார்கள். அவரவர்களும் விவசாயம், வாணிபம், கைத்தொழில்களில் ஈடுபட்டு அமைதியான வாழ்க்கை நடத்துகிறார்கள். பாண்டிய மன்னர் குலமோ நாசமாகி விட்டது......''

''அவ்விதம் எண்ண வேண்டாம்! வீர பாண்டியனோடு பாண்டிய வம்சம் அற்று விட்டதாக நினைக்கிறீர்கள். அது தவறு. பாண்டிய சிம்மாசனத்துக்கு உரிமை கோருவோர் இன்னும் இருக்கிறார்கள். அவர்களுக்காகச் சதி செய்வோரும் இருக்கிறார்கள்.......!''

''ஆகா! எங்கே அந்தச் சதிகாரர்? தெரியப்படுத்துங்கள்!''

''காலம் வரும்போது உங்களுக்கே தெரியும். பாண்டிய குலத்தின் பழைமையான மணிக்கிரீடமும் இந்திரன் அளித்த இரத்தின மாலையும் வைரமிழைத்த பட்டத்து உடைவாளும் இன்னும் இலங்கையில் இருந்து வருகின்றன. ரோஹண மலைநாட்டில் எங்கேயோ ஒளித்து வைக்கப்பட்டிருக்கின்றன. அவற்றை மீட்டுக் கொண்டு வரும் வரையில் பாண்டியப் போர் முற்றுப் பெறாது.''

''ஆபரணங்களை மீட்டுக் கொண்டு வரவேண்டும்; இளவரசர் அருள்மொழிவர்மரை மதுரைச் சிம்மாசனத்தில் அமர்த்திப் பாண்டிய மணி மகுடத்தையும் பட்டாக்கத்தியையும் அணிவிக்கும் நாளும் வர வேண்டும்!''

''ஆகா! இது என்ன வார்த்தை சொல்கிறீர்கள்?''

''குடிமக்களின் நாவிலும் போர் வீரர்களின் உள்ளத்திலும் இருப்பதைச் சொல்கிறோம்.''

''அதெல்லாம் பெரிய இராஜரீக விஷயங்கள். நாம் பேச வேண்டாம். உங்களுக்குச் சந்தோஷமளிக்கக் கூடிய வேறு ஒரு முக்கிய விஷயம் சொல்லப் போகிறேன்......''

''கவனமாய்க் கேட்டுக் கொள்கிறோம், மகா மந்திரி!''

''இலங்கை யுத்தத்தோடு யுத்தம் முடிந்துவிடும் என்று நினைக்க வேண்டாம். இளவரசர் அருள்மொழிவர்மர் இலங்கைப் போர் முடிந்த பிறகு நாலா திசைகளிலும் திக்விஜயம் செய்யப் புறப்படுவார். ஆயிரம் கப்பல்களில் வீரர்களை ஏற்றிக் கொண்டு கீழ்த்திசைக் கடல்களிலே செல்வார். மாநக்கவாரம், மாபப்பாளம், மாயிருடிங்கம், கடாரம், இலாமுரி தேசம், ஸ்ரீவிசயம், சாவகம், புட்பகம் ஆகிய நாடுகளை அந்த மகா வீரர் வெற்றி கொள்வார். தெற்கே முன்னீர்ப் பழந்தீவு பன்னீராயிரமும் கைப்பற்றுவார். மேற்கே கேரளம், குடமலை, கொல்லம் ஆகிய நாடுகள் அவருடைய காலடியில் வந்து பணியும். பிறகு வடதிசை நோக்கிப் புறப்படுவார். வேங்கி, கலிங்கம், இரட்டபாடி, சக்கரக்கோட்டம், அங்கம், வங்கம், கோசலம், விதேகம், கூர்ஜரம், பாஞ்சாலம் என்னும் நாடுகளுக்குப் படையெடுத்துச் செல்வார். காவியப் புகழ்பெற்ற கரிகால் வளவனைப் போல் இமய மலைக்கும் சென்று புலிக் கொடியை நாட்டுவார். வீர சேனாதிபதிகளே! இப்படியெல்லாம் நமது தென்திசை மாதண்ட நாயகர் திட்டம் இட்டிருக்கிறார். தமிழகத்தில் வீர ரத்தமும் வயிர நெஞ்சமும் படைத்த அனைவருக்கும் வேண்டிய வேலை இருக்கும்; தத்தம் வீர பராக்

கிராமங்களை திலைநாட்டச் சந்தர்ப்பம் கிடைக்கும். ஆகையால் நீங்களும் உங்கள் தெரிஞ்ச கைக்கோளப் படையும் பொறுமை இழக்க வேண்டாம்!''

சேனாதிபதிகள் மூவரும் ஏக காலத்தில் ''சுந்தர சோழ சக்கரவர்த்தி வாழ்க! இளவரசர் அருள்மொழி வர்மர் வாழ்க! மகா மந்திரி அநிருத்தர் வாழ்க!'' என்று கோஷித்தார்கள்.

பிறகு அவர்களில் ஒரு படைத் தலைவன் கூறினான்: — ''மகா மந்திரி! இன்னும் ஒரே ஒரு விண்ணப்பம் செய்து கொள்ள விரும்புகிறோம். எங்கள் படையின் பெயர் 'சுந்தர சோழ தெரிஞ்ச கைக்கோளப் படை' என்பது தாங்கள் அறிந்ததே.''

''தெரிந்த விஷயந்தான்.''

''சுந்தர சோழச் சக்கரவர்த்தியின் திருப்பணியில் உயிரையும் விடுவோம் என்று பகைவர்களின் இரத்தம் தோய்ந்த சிவந்த கையினால் அடித்துப் பிரமாணம் செய்து கொடுத்தவர்கள்.''

''அதுவும் நான் அறிந்ததே.''

''ஆகையால் சக்கரவர்த்தியைத் தவிர வேறு யாரையும் நாங்கள் சேர மாட்டோம்; வேறு யார் சொல்வதையும் கேட்க மாட்டோம்.''

''உங்களிடம் நான் எதிர்பார்த்ததும் இதுவேதான்!''

''முன்னொரு காலத்தில் பழுவேட்டரையர்களின் மாபெரும் சேனையில் ஒரு பகுதியாக இருந்தோம். அது காரணம் பற்றி எங்கள் பேரில் யாருக்கும் யாதொரு சந்தேகமும் ஏற்படக் கூடாது......''

''ஆகா! இது என்ன வார்த்தை? யாருக்கு என்ன சந்தேகம்?''

''தஞ்சாவூரில் நடப்பது பற்றி ஏதேதோ வதந்திகள் காற்றிலே வருகின்றன.''

''காற்றிலே வருகிறது காற்றோடு போகட்டும்! நீங்கள் அதையெல்லாம் நம்பவும் வேண்டாம்; திரும்பிச் சொல்லவும் வேண்டாம்.''

''கொடும்பாளூர் வேளாளர்கள் ஏதாவது எங்களைப் பற்றிச் சந்தேகத்தைக் கிளப்பக் கூடும்...''

''கிளப்ப மாட்டார்கள்; கிளப்பினாலும் யாரும் கேட்க மாட்டார்கள்.''

''மனித காயம் அநித்தியமானது...''

''அதனால் சுத்த வீரர்கள் உயிருக்குப் பயப்பட மாட்டார்கள்.''

''திரிபுவனச் சக்கரவர்த்தியானாலும் ஒருநாள்...''

''இறைவன் திருப்பாதங்களை அடைய வேண்டியதுதான்.''

''சக்கரவர்த்திக்கோ உடல்நிலை சரியாக இல்லை...''

''வானத்தில் வால் நட்சத்திரம் பிரகாசிக்கிறது!''

''சக்கரவர்த்திக்கு அப்படி ஏதாவது நேர்ந்து விட்டால், எங்கள் படை வீரர்கள் அருள்மொழி வர்மரின் அகப்பரிவாரமாக விரும்புகிறார்கள்!''

''சக்கரவர்த்தியின் ஆக்ஞையின்படி நடப்பது உங்கள் கடமை!''

''சக்கரவர்த்தியின் ஆக்ஞையை எங்களுக்குத் தெரிவிப்பது தங்களுடைய கடமை. தாங்கள் அந்தப் பொறுப்பை ஏற்றுக் கொள்ளுங்கள். அல்லது தஞ்சைக்குப் போய்ச் சக்கரவர்த்தியைத் தரிசிக்க எங்களுக்கு அனுமதி கொடுங்கள்......!''

''வேண்டாம்; நீங்கள் தஞ்சை போவது உசிதமல்ல; வீண் குழப்பம் ஏற்படும். சக்கரவர்த்தியைக் கண்டு உங்கள் விருப்பத்தைத் தெரியப்படுத்துவதை நானே ஏற்றுக் கொள்கிறேன். நீங்கள் நிம்மதியாக இருங்கள்!''

''தங்களிடம் தெரியப்படுத்தியதுமே எங்களுடைய மனத்திலிருந்த பாரம் நீங்கி விட்டது! போய் வருகிறோம்!''

தெரிஞ்ச கைக்கோளப் படைத்தலைவர்கள் மூவரும் அங்கிருந்து அகன்று சென்றார்கள்.

அநிருத்தப் பிரம ராயர் ''ஆகா! பொன்னியின் செல்வரிடம் அப்படி என்னதான் ஆகர்ஷண சக்தி இருக்குமோ, தெரியவில்லை! அவரை ஒரு முறை பார்த்தவர்கள் கூடப் பைத்தியமாகிவிடுகிறார்களே!'' என்று வாய்க்குள் முணுமுணுத்துக் கொண்டார்.

பிறகு, உரத்த குரலில், ''எங்கே? அந்த முரட்டு வைஷ்ணவனை இங்கே வரச் சொல்லுங்கள்!'' என்று கட்டளையிட்டார்.

(தொடரும்)

(இந்த இதழ் அட்டையில்: குந்தவை, நந்தினி. வண்ண ஓவியம்: மணியம்.)

# வேப்பமரத்து வெள்ளைப் பூக்கள்







**கா**ற்றில் ஒரு மயிலைப்போல ஆடிக் கொண்டிருந்தது அந்த வேப்பமரம். கப்பும் கிளையுமாக வளர்ந்து ஒரு புதுப்பெண்ணைப் போலப் பொலிவு பெற்றிருந்த அது, சபாபதியின் கண்களை உறுத்தியது. உள்ளே போய் ரேடியோவைத் திருகினார்; கர்ண கடூரமாக அலறியது.

அவருக்குக் கொஞ்சமும் தொடர்பில்லாத மேற்கத்திய இசை. 'டிரம்'களும் 'டிரம்பெட்'களும் ஒலியெழுப்பிக் கொண்டிருந்தன. பிடிக்காத குழந்தையைக் கிள்ளிவிட்டு அது காலையும் கையையும் உதைத்துக் கொள்வதையும் அலறுவதையும் பார்த்து ரசிக்கின்ற மனிதர் அவர். ரேடியோவின் ஒலியைக்

கேட்டுப் புன்னகை பூக்க நின்று கொண்டிருந்தார். பரந்த மார்பில் நீளமான சங்கிலி மின்னியது.

வேலைக்காரன் ஓடிவந்தான்.

''என்னங்க ஐயா, என்னிக்கும் இல்லாத திருநாளா இந்த மாதிரிச் சத்தத்தையெல்லாம் கேட்டுக்கிட்டு இருக்கீங்க? உங்களுக்கு பி.யு. சின்னப்பா, எம்.கே. தியாகராஜ பாகவதர் பாட்டுத்தானே பிடிக்கும்?'' என்றான்.

''குப்புசாமி.. காலம் மாறுது. அதுக்கு தகுந்தாப்பில நாமும் மாறிக்க வேணாம்? இதுவும் நல்லாத்தானே இருக்கு? நீயும் கேளு!'' என்றார்.

அவர் சொன்ன விளக்கம் அவனைத் திருப்திப் படுத்தவில்லை. அவருடைய புன்னகையில் ஏதோ உட்பொருள் இருப்பதாக உணர்ந்தான்.

சபாபதியினுடைய பங்களாவின் சுற்றுச் சுவரை ஒட்டி ஒரு குடிசை வீடு. மானத்தைக் காப்பாற்றப் போராடும் ஏழையைப் போலக் காட்சி தந்தது. வெயிலுக்கும் மழைக்கும் ஈடு கொடுக்க முடியாமல் இற்றுப் போய்க் கிடந்தது கூரை. கழிகள் உளுத்துப் போய்த் தளர்ந்து ஆடிக் கொண்டிருந்தன. நிலையில்லாத வாழ்வை அவை நிரூபித்துக் கொண்டிருந்தன.

குடிசைக்கு அருகில் ஒரு வேப்பமரம் நின்று கொண்டிருந்தது. அதன் நிழலில் கிடந்த ஒரு கருங்கல்லைச் சிம்மாசனமாகக் கொண்டு படித்துக் கொண்டிருந்தான் வேல்முருகன். சபாபதியின் ரேடியோ அவனுடைய படிப்புக்குச் சவால் விட்டுக் கொண்டிருந்தது.

பத்தாம் வகுப்பு பொதுத் தேர்வுக்கு இன்னும் இருபது நாட்களே இருந்தன.

பாடம் படிக்க ஒரு புத்தகம் கூட இல்லை. ஏழைப் பிள்ளைகளுக்குப் புத்தகம் தர வேண்டிய பள்ளிக்கூடத்துப் புத்தக வங்கியில், யார் யாருக்கோ, கொடுத்தார்கள். ஃபாரத்தைப் பூர்த்தி செய்து கொண்டு அவன் போய் நின்றபோது, ''புக்ஸெல்லாம்கொடுத்தாச்சு. நீ ரொம்ப லேட்!'' என்று சொல்லிவிட்டார்கள்.

புத்தகங்களை வாங்க இயலாத போது நோட்ஸ்களுக்கு எங்கே போவான்? ஆசிரியர் நடத்தும் பாடங்களை கவனமாகக் கேட்பான்; குறிப்புகள் எடுத்துக் கொள்வான்.

தாயும், தகப்பனும் வெளி வேலைக்குப் போய் எவ்வளவோ கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தார்கள். அப்படியிருந்தும் பசிக்கு வயிறாரச் சாப்பிட முடியவில்லை. பசியைத் தீர்க்க உணவு, மானத்தைக் காப்பாற்ற உடை. அதற்கப்புறம்தானே மற்ற வசதிகளைப் பற்றிச் சிந்திக்க முடியும்?

பல ஆண்டுகளாகப் புறம்போக்காக இருந்த அந்த இடத்தில் அவர்கள் சிறு குடிசையைப் போட்டுக் கொண்டு குடியிருந்தார்கள். மழையில் நனைந்தாலும், வெயிலில் காய்ந்தாலும் ஒண்டிக் கொள்வதற்கு ஏதோ ஓர் இடம் இருக்கிறது என்ற நிம்மதி!

அந்த நிம்மதியும் கொஞ்ச நாட்களாகச் சோதனைக்கு உள்ளாகி இருந்தது. அதற்குக் காரணம் சபாபதி! ஒரு பரந்த நிலப்பரப்பில் மாளிகை கட்டிக் கொண்டு வாழ்ந்த அவர், அவருடைய மாளிகை, தென்னை மரங்கள், வேப்ப மரங்கள், காய்கறித் தோட்டம், பூந்தோட்டம், ஆழ்குழாய்க் கிணறு இவற்றோடு திருப்தி அடையாமல் சுற்றுச் சுவரைத் தாண்டியும் பார்வையைச் செலுத்தினார்.

'அந்த அழுக்கேறிய ஏழைப் பிராணிகளை விரட்டியடித்து விட்டு அந்த இடத்தையும் வளைத்துக் கொண்டால்? பின்னர் விற்றால் ஆயிரக்கணக்கான ரூபாய்க்குப் போகும். அதுவரை வசதியாகக் காற்று வாங்கிக் கொண்டு உட்கார்ந்து கொள்ளலாம்.'

அந்தக் குடிசையை நான்கைந்து பேர் பிய்த்துப் போட்டுத் தரைமட்டமாக்கும் காட்சி அவர் மனத்தில் படமாக ஓடியது.

ரேடியோவின் பயங்கர ஒலியைக் கேட்டுக் காதுகளைக் கைகளால் பொத்திக் கொண்டு, புத்தகத்தைக் கக்கத்தில் இடுக்கிக் கொண்டு அந்தப் பையன் அநாதையைப் போல் அலைவதைக் கண்டு அவர் மிகுந்த மகிழ்ச்சி அடைந்தார். அவனுடைய சட்டையின் முதுகுப் பகுதியில் இருந்த கிழிசல்களைக் கண்டபோது, அவருக்கு உள்ளம் இன்னும் இதமாக இருந்தது.

''குந்தக் குடிசையில்லே, கட்டத் துணியில்லே, இதுக்கெல்லாம் படிப்பு என்ன வேண்டிக் கிடக்கு? படிப்பு! இந்தப் பறைப் பயலுங்க படிச்சிட்டு என்ன கலெக்டர் உத்தியோகத்துக்கா போகப் போறாங்க?'' என்று நக்கலாகக் கேட்டுக் கொண்டார்.

குப்புசாமியைக் கூப்பிட்டார். ''இந்தப் பயலோட அப்பன் என்னடா பண்றான்?''

''நாலு உசிருங்க வயித்தைக் கழுவப் படாத பாடு படுதுங்க, வருமானம் போதுமான அளவு வரலேன்னு...

''வரலேன்னு!''

''கவலையிலே குடிக்க ஆரம்பிச்சிட்டானுங்க.''

''அப்படிச் சொல்லு, அதாண்டா வளர்ச்சி!'' என்று சொல்லி மகிழ்ச்சியடைந்தார்.

குடியை யாராவது நிறுத்தினால் அதற்குத்தான் எல்லோரும் மகிழ்ச்சி அடைவார்கள். அவருடைய மகிழ்ச்சி அவனுக்குக் குழப்பத்தை உண்டாக்கியது.

''குப்புசாமி, அந்த வேப்பமரத்தைப் பார்த்தியா? நம்ம தோட்டத்திலே இருக்கிற மரங்க கூட அப்படி இல்லேடா. அதோட கிளைகளும், இலைகளும் பூத்துக் குலுங்குகிற பூவும், வாசனையும் பார்த்தியா? இந்த வாசனை உடம்புக்கு நல்லதில்லே? இங்கே நம்ம மரங்கள் இன்னும் பூக்கவே இல்லையே!''

''வாசனை - உ ட ம் பு க் கு நல்லது

பூதலூர் முத்து

தாங்க.... ஆனா அந்த வாசனை அவனுங்க வயித்துக்கு சாப்பாடு போடாதே! அது இளங்கன்னா இருந்தப்போ இந்தப் பய வேல்முருகன்தான் ஓடிஓடி ஒரு பானையிலே தண்ணி கொண்டாந்து ஊத்துவான். 'எலே வேல் முருகா ஜாக்கிரதைடா... வீட்டில இருக்கறதே அந்தஒருபானைதான். உடைச்சுப் போட்டேன்னா உன் முதுகுத் தோலை உரிச்சிடுவேன்.' அப்படீன்னு அவங்க அப்பன் கொடுக்கிற எச்சரிக்கையையும் மீறி அவன் தண்ணி ஊத்துவாங்க... அதனால தாங்க அந்த மரம் இப்போ 'தளதள'ன்னு பார்க்கக் குளிர்ச்சியா இருக்கு! அந்தமரம்னா அவனுக்கு உயிருங்க!''

'அவனுக்கு உயிருங்க' என்று அவன் சொன்னதை மட்டும் கவனமாக மனத்தில் குறித்துக் கொண்டார்.

சூரியன் இன்னும் உதிக்காத போது சபாபதியின் உள்ளமும் உடலும் கொதிக்கத் தொடங்கி விட்டன. அதற்குக் காரணம் வேப்பமரத்தடியில் அவர் கண்ட காட்சி: வேல் முருகன் அமைதியாகப் படித்துக் கொண்டிருந்தான்!

தமக்கு ஒரு பிள்ளை இல்லாத போது யாரோ ஒருவனுடைய வீட்டுப் பிள்ளை படிப்பதாவது? ஒருவனைப் பிடிக்க வில்லை—எதிரி என்றால் நாலு பேரை வைத்து அடிக்கலாம். அவனுடைய படிப்பை முறியடிக்க நாலு பேரை வைத்துப் படிக்கச் சொல்ல முடியாதே! அதனால் அவன் படிப்பு எப்படிக் கெடும்?

தீவிரமாக ஆராய்ந்து கொண்டிருந்தார் அவர்.

குப்புசாமியைக் கூப்பிட்டார். ''ஏன்டா! வேப்பமரம் நல்லதுதானே?''

''நல்லதுதாங்க. வேப்பமரத்துக் காத்துப் பட்டா எந்த நோயும் அண்டாதுங்க. நோய் கண்டவங்களை வேப்பிலையாலே அடிக்கிறதைப் பார்த்திருப்பீங்களே! கிருமிகளைக் கொல்ற சக்தி அதுக்கு இருக்குன்னு சொல்றாங்க. அதோட நிழல்ல கொஞ்ச நேரம் உட்கார்ந்தா எப்படிக் குளு குளுன்னு. ஜிலு ஜிலுன்னு இருக்கும்னுதான் உங்களுக்குத் தெரியுங்களே!''

''அதெல்லாம் தெரியும்டா. மரத்தை வெட்டினா?'' பார்வையில் ஆர்வம் பளிச்சிட்டது.

''அலமாரி செய்யலாம், மேஜை செய்யலாம், கதவு செய்யலாம், வாசக்கால் செய்யலாம், உத்தரமாப் போடலாம். ஏன், நம்ம மரத்தில ஏதையாவது வெட்டப் போறீங்களா?''

கோபம் பொங்கிக் கொண்டு வந்தது.

''இவன் யாருடா மடையன்! கண்ணுக்குக் கண்ணா வளர்த்த நம்ம மரத்தை யாராவது வெட்டுவாங்களா? காம்பவுண்டைத்தாண்டி அந்தாத் தெரியுது பார். அந்த மரத்தை வெட்டத்தான் ஏற்பாடு பண்ணனும்.''

அவனுக்கு இரத்தமெல்லாம் உறைந்து விட்டது.

'வேல் முருகன் கண்ணுக்குக் கண்ணாக வளர்த்தமரமாயிற்றேஅது! இத்தனை மரங்கள் இங்கேயிருக்கும் போது அங்கேயிருக்கிற அந்த ஒற்றை மரத்தை வெட்ட வேண்டும் என்று ஆசைப்படுகிறாரே இவன்! இவனுடைய உள்ளம் எவ்வளவு குரூரமானதாக இருக்கவேண்டும்!'

அதிர்ச்சியை வெளிக்காட்டிக் கொள்ளாமல், ''சரிங்க எஜமான். ரங்கனை இது விஷயமாக் கலந்து பேசறேன்'' என்றான்.

அவருக்குச் சிரிப்பு பொத்துக் கொண்டு வந்தது.

''என்னடா என்னமோ அமெரிக்காவோடயோ ரஷ்யாவோடயோ ஒப்பந்தம் பண்ணப் போறது மாதிரி கலந்து பேசறேன்னு சொல்றே?''

''ஆமா எசமான். உடையவன் அவன் தானே? அவனைத்தானே பார்த்துப் பேசணும்?''

அவருடையமுகபாவம்மாறியது. கண்கள் துடித்தன. ''எனக்கு எதுவும் தெரியாது. நாளைக்குக்காலையில அந்தமரம்அடிவேரோட இங்கே வந்து சேர்ந்திடணும். பணம் அம்பது நூறு கூடப் போனாலும் பரவாயில்லே.''

வெள்ளை நிறத்தில் சிறுசிறு பூங்கொத்துக்களோடு குலுங்கிய அந்த மரத்தின் தோற்றம் வேல்முருகனுக்கு மிகுந்த குதூகலத்தை அளித்தது. இப்போது தான் முதல் முறையாகப் பூத்திருக்கிறது. தந்தையும் தாயும் தராத மகிழ்ச்சியை அது அவனுக்குக் கொடுத்தது!

ஆர்வத்தோடு படித்துக் கொண்டிருந்த அவனுடைய தலையிலும், சட்டையிலும், மடியிலும், புத்தகங்கள் மீதும் அந்த வெண்ணிறப் பூக்கள் கொட்டின. பரீட்சைக்குப் போகும் அவன் மீது பூமாரி பொழிந்து அந்த மரம் ஆசீர்வதிப்பதுபோல் அவனுக்குத் தோன்றியது. 'என்ன நினைத்தானோ, கொஞ்சம் பூக்களை அள்ளித் தன்னுடைய சட்டைப் பையில் போட்டுக் கொண்டான். தனக்கு ஆறுதல் தர அந்த மரமாவது தனக்கு உரிமையாக இருக்கிறதே என்று நினைத்தான். தென்பாக இருந்தது.

அன்று முதல் பரீட்சை. நன்றாகப் படித்திருந்தான். இளம்பச்சையும், கெட்டிப்பச்சையுமாகக் காட்சி அளித்த இலைத் தொத்திகள். துள்ளும் கிளைகள், சிரித்த பூக்கள் எல்லாமே அவனுக்கு நம்பிக்கையை வாரி வாரி வழங்கியிருந்தன.

வேல் முருகனுக்குத் தெரியாமல் ரங்கன், உடைந்து போன கட்டில் காலுக்காக ஒரு கிளையை வெட்டி விட்டான். அதனால் அவனிடம் பேச்சையே முறித்துக் கொண்டான் அவன்.

வெட்டிய அந்த இடத்தில் இரண்டு நாள் கழித்துப் பார்த்தான். வேப்பம்பிசின் கசிந்து வந்திருந்தது. அது அந்தமரம் அழுத அழுகையாக அவனுக்குப் பட்டது. இப்போது, வெட்டு விழுந்த அந்த இடத்திலும் இளந்தளிர்கள் கருஞ்சிவப்பு நிறத்தில் தோன்றி

# ஸாஃப்ட் அன்ட் ஸில்க்கியின் பெருகிவரும் கூட்டத்திலே சேருங்கள்.






"ஆகா!...எத்தனை வசதி."



**ஸாஃப்ட் அன்ட் ஸில்க்கி ஹேர் ரிமூவிங் லோஷன். பெண் — அழகுப் படைப்பாளர் லக்மே அளிப்பது.**

ஏராளமான பெண்கள் ஸாஃப்ட் அன்ட் ஸில்க்கி ஹேர் ரிமூவிங் லோஷனின் பெருகிவரும் கூட்டத்திலே சேர்ந்து வருகிறார்கள். இதில் வியப்பில்லையே! காரணம், ஸாஃப்ட் அன்ட் ஸில்க்கி லோஷன் உபயோகிப்பதற்கு மிகவும் வசதியானது. இது சீராகவும் எளிதாகவும் பரவுகிறது.

அதாவது, இதிலே சள்ளை இல்லை, தொல்லை இல்லை. அதைவிடவும் ஒன்று: இதை தயாரித்தவர்கள் லக்மே! இதே லக்மேயிடம்தான், அழகு மற்றும் சருமப் பராமரிப்பிற்காக பெண்கள் முழு நம்பிக்கை வைத்துள்ளனர்.

வாருங்கள் நீங்களும் ஸாஃப்ட் அன்ட் ஸில்க்கியின் பெருகி வரும் கூட்டத்திலே சேருங்கள்.

பட்டுப்போன்ற மென்மையை அங்கமெங்கும் அளியுங்கள்.

**லக்மே**

Enterprise/LL/132 Tm

# ஜோக் எழுதுங்கள்! பரிசு ரூ.200/-



பத்திரிகை ஆசிரியர், அரசியல்வாதி, சினிமாத் துறை எல்லாம் ஆயிற்று. அடுத்தது யார்? சில ஹோட்டல் பண்டங்கள் ருசிக்காவிட்டாலும் ஜோக் சுவையாக இருக்குமல்லவா! வளைத்துப் போடுங்கள், ஹோட்டல் முதலாளி, சர்வர், சரக்கு மாஸ்டர் முதலியோரை! இதோ, வெற்றிடத்தில் ஹோட்டல் துறையைக் கிண்டல் செய்து ஒரு ஜோக் எழுதி விலாசத்தைப் பூர்த்தி செய்து, இந்த அரைப்பக்கத்தை முழுமையாகக் கத்திரித்து அனுப்புங்கள். பிரசுரமாகும் ஜோக்குகளுக்குப் பரிசுத் தொகை சமமாகப் பிரித்து அளிக்கப்படும். உறையின் மேல் ''ஹோட்டல் ஜோக்'' என்று மறவாமல் குறிப்பிடவும்.

**முடிவு தேதி: 9.9.87.**

என் பெயர்: ..............................

விலாசம்: ..............................

..............................

யிருந்தன. ஒன்றுக்குப் பத்தாகப் பச்சைக் குச்சிகள் பளிச்சிட்டு நின்றன. ரப்பராக வளைந்து காற்றில் ஆடின. என்ன கஷ்டம் வந்தாலும் மீண்டும் எழுந்து நிமிர்ந்து நிற்கலாம் என்பதற்குப் பச்சைக் கொடி காட்டியது மாதிரி இருந்தது அந்தக் காட்சி.

தகப்பன் வெட்டிய கிளை காற்றில் உலர்ந்து கொண்டிருந்தது. வெயிலில் காய்ந்துகொண்டிருந்த அந்தக் கிளை அவனுடைய உள்ளத்தில் ரணத்தை ஏற்படுத்தியது.

வேப்பமரத்துக்கு ஏதாவது ஒன்று என்றால் வேல்முருகன் பதறிவிடுவான். அது தெரிந்தும் ரங்கன் பல்துலக்க அந்த மரத்தில்தான் குச்சிகளை ஒடித்துக் கொண்டிருந்தான். ஒரு திருடனைப் போல் பதுங்கிப் பதுங்கி அந்தக் காரியத்தைச் செய்தான்.

கவனமாக மரத்தைப் பார்வையிட்ட அவனுக்கு அங்கங்கே சிறு குச்சிகள் ஒடிக்கப்பட்டிருப்பது தெரிந்தது. அவனுடைய விரல்களை ஒடித்தது போலத் துடித்தான். தகப்பனுடைய வேலையாகத் தானிருக்கும் என்பதை ஊகித்துக் கொண்டான். அதை உறுதி செய்வது போல் வீட்டுப் பின்புறம் பாத்திரம் கழுவும் இடத்தில், பல் துலக்கப்பெற்ற வேப்பங் குச்சிகள் நான்கைந்து தலையைப் பரப்பிக் கொண்டு கிடந்தன. நாக்கு வழிக்கத் துணை போய் ஒன்றிரண்டு நீளவாட்டில் பிளவுண்டு கிடந்தன.

''அம்மா,' அப்பா செய்யறது மோசம்! வேலியோரமா இருக்கிற வேலாமரம், கருவமர்த்திலே குச்சி ஒடிக்கக் கூடாதா? ரெண்டு தப்படி நடந்தா அந்தா அந்த ஆலமரத்திலே விழுது வெட்டலாமே. இனிமே இந்த மரத்திலே கை வைக்க வேண்டாம்னு சொல்லும்மா. இதிலே ஒடிக்க எப்படிம்மா அவருக்கு மனசு வருது? அன்னிக்கி கிளையை வெட்டிப் போட்டாரு, இன்னும் எம்மனசே ஆறலேம்மா. சொல்லிவைம்மா.''

அந்த மரத்தை வெட்டக் குப்புசாமிக்குக் கொஞ்சங்கூட மனம் வரவில்லை. அது, புத்தருக்கு ஞானம் தந்த போதிமரம் போல் வேல்முருகனுக்குப் படிப்பையும், நம்பிக்கையையும் தரும் கற்பக விருட்சம் என்பது அவனுக்குத் தெரியும். ஆனால், சபாபதியை எதிர்த்துக்கொள்ள முடியாதே. அவர் சொல்வதைச் செய்ய மறுத்தால் வீட்டு வேலை பறிபோகும். அவருடைய மனைவி ஏதோ கொஞ்சம் நல்லவளாகத் தெரிகிறாள். அவ்வப்போது அவள் மூலம் ஏதாவது உதவி பெற்று ஒன்றுமில்லாதவர்களுக்குக் கொஞ்சம் ஒத்தாசையாக இருந்து வருகிறான். இந்த மரத்துப் பிரச்னையால் அந்த வாய்ப்பும் போய்விட்டால்?

அவனுக்கு வேறு மாற்றுத் திட்டம் எதுவும் தோன்றவில்லை, அவர் சொன்ன கெடு நெருங்கிக் கொண்டிருந்தது.

சாராய நெடி மூக்கைத் துளைத்தது. ரங்கன் முன்னே வர பின்னால் வாள், கோடாரி சகிதமாக இரண்டு ஆட்கள். அவர்களுக்குப் பின்னால் குப்புசாமி!

''இந்த மரம் தான். கோடாலியாலே

வெட்டி வாளாலே அறுத்துச் சாச்சிடுங்க. அப்புறமாத் தோண்டி அடி வேரோடப் பேத்து எடுத்திடலாம்.''

உள்ளே இறங்கியிருந்த சாராயம் தந்த உற்சாகத்தில் வார்த்தைகளை வெளிப்படுத்தினான் ரங்கன்.

''ஐயோ படுபாவி மனுஷா, கிழிஞ்சு போன பழைய புஸ்தகமாவது கிடைக்காதான்னு வேலு அலேஞ்சான். நீ கொஞ்சங் கூடக் கவலேயே படலே. அவன் எப்படிப் படிக்கிறான்னு எப்பவாவது கேட்டியா? இப்போ அவன் ஆசையா வளர்த்த மரத்து கிட்டே வந்திட்டியே... போன மாசம் ஒரு கிளையை வெட்டினே... புள்ளெநெருப்பில விழுந்தது மாதிரி துடிச்சு மனசொடிஞ்சு போயிட்டான். தினமும் பல்லு விளக்க நீ குச்சி ஒடிக்கறதையே அவனுல பொறுத்துக்க முடியலே. இப்போ உசுரைக் கொண்டு போக எமன் பாசக் கயித்தோடயும் எருமையோடயும் வந்தது மாதிரி வந்திட்டியே. இந்தக் கொடுமையை நான் எங்க போயி சொல்லுவேன்? உனக்கு என்ன கண்ணவிஞ்சு போச்சா?'' என்று ஒப்பாரி வைத்தாள் அஞ்சலே.

''உனக்கென்னடி தெரியும். போடி! பக்கத்துப் பங்களாவிலே இருக்காரே சபாபதி.. அந்த நல்ல மனுஷன் நாம படற கஷ்டத்தைப் பார்த்திட்டு ஐந்நூறு ரூபாய் கொடுத்திருக்கார். 'இந்தப் பணத்தை நீ திருப்பித் தர வேணும்டா. அதுக்குப் பதிலா உங்குடிசைக்கு முன்னுலே நிக்குதே அந்த வேப்பமரம் அதை வெட்டிக் கொடுத்துடு போதும்'னு சொல்லிட்டாரு.பெரிய மனுஷன்! எவ்வளவு நல்ல மனசு! நாம வீட்டுக்குத் தேவைப்பட்ட அரிசி, உப்பு, புளி, மிளகாய் எல்லாம் வாங்கிக்கலாம். அது மட்டுமில்லே உனக்கு ஒரு சேலேயும் வாங்கித் தர்றேன்'' என்று அவளுக்கு ஆறுதல் சொன்ன அவனுடைய நினேவெல்லாம் சாராயக் கடையிலேயே நிலேத்திருந்தது.

அவ அப்படித்தான் ஏதாவது சொல்லிக்கிட்டிருப்பா. நீங்க வெட்டி எடுத்துக்கங்க.'' என்று அவர்களுக்குப் பச்சைக் கொடி காட்டினுன்.

''எனக்கு எதுவும் தெரியாது. அவன் வந்தா நீதான்யா பதில் சொல்லனும்.'' என்றவளுடைய நினேவில் புளியும், மிளகாயும் ருசித்தன; அரிசி வெந்து கொண்டிருந்தது; கிழிந்த சேலே போய் புதுச்சேலே உடம்பில் ஒட்டிக் கொண்டிருந்தது.

''நீ என்னுகிட்ட வுட்டுடு.நான் பேசிக்கிறேன். இந்த மரத்தை வுட்டா ஊர்ல வேற மரம் இல்லே? வேப்பங்கொட்டையைப் பொறுக்கியாந்து புதுசாக் கூட முளேக்க வைக்கலாம். ஏரிக் கரையிலேயே முளேச்சிக் கெடக்கு. எத்தனே வேணும்? நான் கொண்டாரேன். அவன் கெடக்குறுன் பொடிப் பயல்ச''

சாராயம் தந்த துணிச்சலில் பேசிய அவன் உள்ளூர வேல்முருகனேப் பற்றிய அச்சத்தில் நின்று கொண்டிருந்தான்.

சபாபதியின் மனேவி ரேடியோவில் பாட்டு வைத்துக் கேட்டுக் கொண்டிருந்தாள். மெல்லிய ஒலிதான். அதையும் அவர் ஓடிவந்து நிறுத்தியபோது அவள் ஆச்சரியப்பட்டாள். அவர் அதை நிறுத்திவிட்டு, ஜன்னல் வழியாக, அந்த வேப்பமரம் அறுக்கப்படும்ஒலியை ஆர்வத்தோடுகாதுகொடுத்துக் கேட்டார்.

அந்த ஒலி 'கரக், கரக்' என்று கேட்டுக் கொண்டிருந்தது. ஆட்டின் கழுத்து அறுபடும் போது ரத்தம் பீறிடுவது போல் அந்த ஈர மரத்தூள் அங்குமிங்கும் சிதறி விழுந்தது. கீழே விழுந்து கிடந்த பூக்களோடு அதுவும் சேர்ந்து கொண்டது. புதுச் சேலே ஆசை இருந்தாலும் அஞ்சலேயின் இதயத்தை யாரோ சம்மட்டியால் அடிப்பது போலிருந்தது. அன்றுடம் இப்படித்தான் பணக்கார உலேக்களத்தில் ஏழை இரும்புகள் காய வைக்கப்பட்டு அடித்து நிமிர்த்தப்படுகின்றன; வாழ்க்கைப் போராட்டத்திற்குத் தயார் செய்யப்படுகின்றன. எரிகின்ற வறுமைத் தீயில்தான் அவை புடம் போடப்படுகின்றன!

வேல்முருகன் பரீட்சை முடிந்து வந்து கொண்டிருந்தான். சாலேயில் நடந்தவாறே, தூரத்தில் தெரியும் அவனுடைய வேப்ப மரத்தைப்பார்த்துரசித்தான்.குடிசைகளுக்கு, வேலிகளுக்கு செடிகளுக்கு எல்லாம் மேலே தெரிந்த அந்த மரத்திலிருந்து 'சடார் சடாரெ'ன்று ஒரு காகம் இறக்கையை மார்பில் அடித்தவாறு மேலே பறந்தது. காகம் பறந்த அதே நொடியில் அந்த மரம் திடீரென்று ஒரு பெரிய குலுக்கலோடு தன் அகன்ற தலேயை ஆட்டியவாறு கீழே சாய்ந்ததைப் பார்த்தான். இதயத்தில் பலத்த அடி விழுந்தது. அவன் கண்களேயே அவனுல் நம்ப முடியவில்லே. 'என்ன நடந்தது? ஏன் மரம்சாய்கிறது? ஐயோ! யாருடைய கொடூரச் செயல் இது?' என்று படபடத்துக் குமுறிய நெஞ்சில் கை வைத்தவாறே மூச்சிரைக்க வீட்டை நோக்கி ஓடினுன் அவன்!



''உங்களுக்குஓட்டுப்போட்டுஜெயிக்க வச்ச ஜனங்களுக்கு – நன்றி சொல்லவாவது தொகுதிப் பக்கம் வரக் கூடாதா?''

''வரலாம்தான்! ஆனுஎனக்குஓட்டுப் போட்ட ஜனங்கள் நம்ம தொகுதியில இல்லேயே...!''

— கரடிகுளம் ஜெயாபாரதிப்ரியா

# நிற்க நிழல் வேண்டும்!

## 5

உப்பை ஏந்தியபடி நடக்கும் போது மனத்தில் மெல்லிய கனம் அமர்ந்திருந்தது. வித்தியாசமாக ஓர் இனம் நடத்தப்படுவதற்கு என்ன அடிப்படைக் காரணம் என்று குழப்பம் ஏற்பட்டது.

"உப்பை வாங்க உப்பளத்துக்குப் போனீரோ?"

அவன் கவனம் கலைந்து நிமிர்ந்தான்.

சீலியா. திண்ணைக் குறட்டில் காலைத் தொங்கவிட்டு உட்கார்ந்திருந்தாள். கறுப்புக் குட்டை ஸ்கர்ட்டும் மேலே ரோஜா வண்ணத்தில் ப்ளவுசும் அணிந்திருந்தாள். கறுப்பு ஸ்கர்ட்டுக்குக் கீழே தெரிந்த பொன்னிறக் கால்கள் முன்னும் பின்னும் வேகமான ஆட்டத்தில் இருந்தன.

மனத்திலிருந்த கனம் அந்தக் கணமே இறங்கிக் கொண்டது. உதடுகளில் இளநகை அரும்பிற்று.

"இன்னைக்கு நடக்கிற கூட்டத்தைப் பற்றின அறிவிப்புத்தான் வீதி முழுவதும் இருக்கு. நா உப்பு வாங்கப் போன சேதி யாரு அறிவிச்சது?"

"உன் அம்மா. அரை மணி நேரமா 'உப்பு வாங்கப் போன என் ராசாவைக் காணல்லையே'ன்னு புலம்பிக்கிட்டிருக்கார்கள்!" என்று அவள் பிலாக்கணம் போல் பாடிக் காண்பித்தாள்.

அவன் சிரித்தான்.

"உன் அண்ணன்தான் பிடிச்சு வெச்சுக்கிட்டான் பேச!"

சீலியாவின் முகபாவம் மாறிற்று "ஓ. சரிதான். இதை நீ உங்கம்மா கிட்டச் சொல்லாதே!"

"ஏன்?"

"தேவா வைப்பத்தி உங்கம்மாவும், அப்பாவும் கவலைப்படறது போதாதா?"

"அஹ்!" என்றான் அவன் அலட்சியமாக. "நீ ரொம்பப் பெரிய மனுஷி போல் பேசாதே. உனக்கு உலக நடப்பைப் பற்றி ஒண்ணும் தெரியாது. நீ இப்படிக் காலை ஆட்டிக் கிட்டு உட்கார்ந் திருக்கிறதிலேயே தெரிகிறது."

"ஆஹா! இவரு பெரிய ஆளு. மீசை கூட முளைக்கல்லே!"

அவனுக்குச் சுரீரென்று கோபம் வந்தது. அவன், ஆத்திரத்துடன் முன்னுக்கு நகர்ந்து அவளுடைய காதைத் திருகப் போகையில் வீட்டுக்குள்ளிருந்து அம்மா் வெளிப்பட்டாள்.

அவன் சட்டென்று பின்னால் நகர்ந்து தன் வீட்டை நோக்கிச் சென்றான்.

"நேரங்கழிச்சு வந்ததுமில்லாம பக்கத்து வீட்டுப் பெண்ணோட உனக்கென்னடா வம்பு?" என்று அவன் உள்ளே வந்ததும் அம்மா அதட்டினாள்.

அவன் பதில் ஏதும் சொல்லாமல் அசட்டுப் புன்னகையுடன் கால் கழுவச் சென்றான். முன்பெல்லாம் அம்மாவுக்கு கோபமே வராது. இப்பொழுதோ சின்ன விஷயத்துக்கெல்லாம் எரிச்சல் அல்லது பயம். அண்ணன் தேவாவின் போக்கு மாறினதிலிருந்து அம்மாவின் போக்கும் மாறிவிட்டது.

எத்தனை ஆச்சரியமான விஷயம் இது! கொழும்பில் அரசு செய்த ஒரு சாஸனம் ஒரு வீட்டில் இத்தனை மாற்றங்களை ஏற்படுத்த வேண்டுமானால், அது எத்தனை சக்தி உடையதாக இருக்க வேண்டும்! இனி எல்லார் வீட்டிலும் அம்மாமார்கள் சாந்தமிழந்து, பொடியன்கள் வீட்டை விட்டு எங்கே போகிறார்கள் என்று தெரியாத ஒரு ரகசிய வாழ்வு வாழ்ந்து, அப்பாக்கள் கையாலாகாத்தனத்துடன் பார்த்துக் கொண்டு....

அப்பாவைப் பார்க்கும் போதெல்லாம் அவனுக்கு அப்படித்தான் தோன்றுகிறது. ஏதோ ஒரு கையாலாகாத்தனத்தில் அவர் தவிக்கிற மாதிரி....

அவன் சட்டென்று நின்றான். குளியல் அறையிலிருந்து தேவநேசன் வெளிப்பட்டான்.

"அட அண்ணா?" என்றான், ஜயசீலன் உற்சாகத்துடன்.

தேவா அவனைப்பார்த்து மெலிதாகப் புன்னகை செய்தபடி தன் அறையை நோக்கி நடந்தான்.

"எப்ப வந்தேண்ணா?"

"கொஞ்ச நேரம் முந்தி."

ஜயசீலன் அவனைத் தொடர்ந்து சென்றான்.

"ஏன் வீட்டுக்கே வரல்லே நேத்து?"

தேவநேசன் குனிந்து லுங்கியைச் சுற்றியபடி மெல்லிய குரலில் சொன்னான்.

"வேலை இருந்தது."

என்ன வேலை என்று தெரிந்து கொள்ள வேண்டும் என்று ஜயசீலனுக்கு வழக்கம் போல் துடிப்பேற்பட்டது. ஆனால், அந்தக் கேள்வியைக் கேட்டால் என்ன பதில் வரும் என்று தெரியும்.

"அது என்ட சொந்த விஷயம்!"

வெற்று மார்பின் கூடு தெரிந்தது. ரொம்ப மெலிஞ்சு போயிட்டே அண்ணா, அதான்

வாஸந்தி

அம்மா கவலைப்படறாங்க!''

பனியனை மாட்டிக்கொண்டே தேவநேசன் அசுவாரஸ்யமாகப் பதில் சொன்னான்.

''கவலைப்பட வேண்டிய விஷயத்துக்கு அம்மாவும், அப்பாவும் கவலைப்படமாட்டார்கள்!''

மேஜைமேல் கிடந்த புத்தகங்களை ஒழுங்கு படுத்தி எதையோ தேடிக் கொண்டிருந்த அவனையே சற்று நேரம் ஜயசீலன் பார்த்தபடி இருந்தான். பிறகு மெல்லிய குரலில் கேட்டான்.

''நீ ஒரு போராளிக் கும்பல்லே இருக்கியா?''

தேவா விருக்கென்று நிமிர்ந்தான்.

''உனக்கெதுக்கு இதெல்லாம்?''

ஜயசீலன் தலையைக்குனிந்துகொண்டான்.

''நீ இருக்கலாம்னு ஜஸ்டின் சொன்னான். இப்ப எல்லாப் பொடியன்களும் போராளிகளா, ஆகாம இருக்கமுடியாது. போகிற போக்கிலே நீயும் நானும் கூட ஏதாவது இயக்கத்திலே சேராம இருக்க இயலாதுன்னான்!''

இன்னும் என்ன சொன்னான்?''

''சிங்கள அரசு ஒவ்வொரு விஷயத்திலேயும் நமக்கு எதிரா நடக்கிறது. நாளைக்குக் காலேஜிலே ஸீட் கிடைக்காது. வேலை கிடைக்காது — எல்லாத்துக்கும் இந்தப் பெரியவங்க இருக்கிற மாதிரி சும்மா இருக்க முடியுமான்னான்.''

தேவநேசன் எதிர்பாராமல் அவன் அருகில் வந்து தோள்மேல் கைவைத்தான். கண்களில் கவலை தெரிந்தது.

''ஜஸ்டின் சொல்றது சரிதான். ஆனால், நீ ரொம்பச் சின்னவன். இதிலே யெல்லாம் நுழைய வேண்டாம். ஏ லெவலை முடிக்கணும். அந்த அளவுக்காவது படிப்பு இருக்கணும்.''

''எனக்கும் அரசியல் விஷயமெல்லாம் புரியாம இல்லே.''

''இதோபார் சீலன், ஒருத்தன் போதும் ஒரு குடும்பத்துக்கு. நீ வீட்டைப் பார்த்துக் கொள்ளணும், தங்கைமாரைப் பார்த்துக்கணும். அப்பா, அம்மாவை கவனிக்க எனக்கு இயலாது. நீ இருக்கிற தைரியத்திலேதான் நான் அலைஞ்சு திரியறேன்.''

தேவாவின் முகத்தில் ஒரு தீவிரம் பளபளத்தது. குரலில் இரக்கம் தொனித்தது.

இப்பவும் அவன் போராளிக் கும்பலில்





நிருபர்: "இவ்வளவு பேசுறீங்களே, உங்க கட்சி எம். எல். ஏக்களும், மந்திரிகளும் கோடிக் கணக்காச் சம்பாதிச்சுட்டாங்களே... எப்படி?"

தலைவர்: "அதுதாங்க எனக்கும் புரியலே... நானே லட்சக்கணக்கில்தானே சம்பாதிச்சிருக்கேன்!"

— கரடிகுளம் ஜெயாபாரதிப்ரியா

இருக்கிறான் என்று சொல்லவில்லை. சொல்ல மாட்டான்.

"நீ தமிழ் மாநாட்டுக்குப் போறியோ?"

"போறேனே."

"இண்டைக்கு?"

"இண்டைக்கும்தான்."

"நானும் உன்னோடு வரேன்."

தேவநேசன் ஜயசிலனின் தோளிலிருந்து கையெடுத்தான்.

"நீ அப்பாவோடு போ. அதுதான் நல்லது." என்றான் ஒருவிதக் கண்டிப்புடன். "கூட்டம் ஆரம்பிக்கிறதுக்கு ஒரு மணி முன்னாலே போயிடுங்கள். கனக்கும்பல் வரும் இண்டைக்கு."

"நீ?"

"நா சாப்பிட்ட கையோடு போயிடுவேன்."

"எங்கே?"

தேவா விருக்கென்று நிமிர்ந்தான். "இதையெல்லாம் நான் உனக்குக் கதைக்க முடியாது, சிலன்!" என்றான் அடங்கிய குரலில்.

சற்று நேரம் இருவரும் பேசவில்லை.

"கூட்டம் முடிஞ்சதும் வீட்டுக்கு வருவியா?"

"தெரியாது, எனக்கு வேலை இருக்கு. நீ இப்பப் போ."

அப்பா எங்கோ வெளியில் போயிருந்தார். தேவநேசன் தனியாக அமர்ந்து சாப்பிட்டு விட்டுக் கிளம்பிப் போய்விட்டான். அப்பா வந்ததும் தேவா வந்து சாப்பிட்டுப் போனதை அம்மா சொன்னாள். அப்பா பதிலே சொல்லவில்லை. தேவாவின் நினைவை அகற்ற முயற்சி செய்பவர் போல் மாலையில் நடக்கப் போகும் கூட்டத்தைப் பற்றியே கிளம்பும் வரை பேசினார்.

ஜயசிலன் உற்சாகத்துடன் அப்பாவுடன் கிளம்பினான். வழியெல்லாம் ஒரே கோலாகலம். தங்கள் வீட்டுச் சொந்த விசேஷம் போல் பெண்களும் அலங்கரித்துக் கொண்டு ஒரே சிரிப்பும் பேச்சுமாக நடந்தார்கள். சீலியாவைக் கட்டாயப்படுத்தி அழைத்து வந்திருக்க வேண்டும் என்று அவன் நினைத்துக் கொண்டான். வீரசிங்கம் கூடத்தை அடைந்ததும் அவர்கள் திகைத்துப் போனார்கள். ஜனம் சமுத்திரமாக அங்கு திரண்டிருந்தது.

"இத்தனை ஜனம் வரும் என்று நான் எதிர் பார்க்க இல்லை" என்றார் அப்பா அதிர்ச்சியுடன்.

தொலைவில் பொன்னம்பலத்தின் தலையைப் பார்த்துவிட்டு அப்பா சப்தமாகக் கேட்டார்.

"பொன்னம்பலம்! கூடத்துக்குள்ளே இந்தக் கும்பல் எப்படி நுழையும்?"

"அதான் திறந்தவெளி அரங்கத்துக்கே போயிரலாமுனு பார்க்கிறோம். மழையும் வராப்லே இல்லே. மேயரண்டை சொல்லப் போயிருக்காங்க!" என்றார் பொன்னம்பலம் சற்று அருகில் வந்து.

"திறந்தவெளி அரங்கத்திலேதானே முதலிலேயே ஏற்பாடு செஞ்சோம்? இப்ப எதற்கு மறுபடி மேயரைக் கேட்கணும்?"

"இல்லையே. நேற்றுப் பெய்த மழையினாலே, அந்த எண்ணத்தை மாத்தி, மேயர் துரையப்பாவிடமும் சொல்லிட்டம். அரங்கத்துக் கதவு இப்பப் பூட்டியிருக்கு. மறுபடி துரையப்பா அனுமதி கொடுத்தாத்தான் அரங்கத்துக் கதவு திறக்கும்."

பொன்னம்பலத்தின் பேச்சை ஒரு பக்கம் கேட்டுக் கொண்டு, முன்பின் கண்டிராத ஜனத்திரளைத் திகைப்புடன் பார்த்தபடி நின்றான் ஜயசிலன்.

பொன்னம்பலம் இரகசியக் குரலில் "துரையப்பாவைத் தெரியுமில்லே? தமிழன் என்று பெயரே தவிர, சிங்கள அரசுக்குக் கூலி ஆள். இத்தனை பெரிய விழா நடக்கிறது. இந்தப் பக்கமே வரல்லே," என்றார்.

நேரம் நகர்ந்து கொண்டேயிருந்தது. எந்த வித முடிவுக்கும் நிர்வாகிகள் வந்ததாகத் தெரியவில்லை. கூட்டத்தின் வேகத்தையும் சலசலப்பையும் பார்க்கப் பார்க்க ஜயசிலனுக்குக் கலவரமேற்பட்டது.

"ஜனார்த்தனன் என்கிற பொடியன் தமிழ் நாட்டிலேர்ந்து வந்திருக்கான். அவன் மேடையிலேறிப் பேசக் கூடாதுன்னு மேயரும் கமிஷ்னரும் கட்டளையிட்டிருக்கார்கள். பேச்சாளிகளுடைய பட்டியல் கேட்டார்கள். கொடுத்திருக்கோம். அந்தப் பொடியனைப் பேசச் சொல்ல மாட்டோம்னு எழுதிக் கொடுத்த பிறகுதான் போலீஸ் அனுமதி கிடைத்தது."

யாரோ பொன்னம்பலத்தை அழைத்தார்கள். அவர் உள்ளே சென்று சற்றுப் பொறுத்து வெளியே வந்தார். முகத்தில் மெலிதான கோபம் பளபளத்தது.

"மேயரும் கமிஷனரும் காண இல்லையாம். ஊரை விட்டே போயிட்டான்கள் போலிருக்கு. திறந்தவெளி அரங்கத்துக்கு இனி போக இயலாது. அனுமதி இல்லாமல் காவலாளி கேட்டைத் திறக்க மாட்டான்."

"என்ன செய்வம் இப்ப?"

"இங்கே வெளியிலே மேடை போட்டு ஏற்பாடு செய்வார்கள்."

"இங்கேயா?" என்றார் அப்பா திகைப்

**லிப்கோவின் அகராதிகள் வரிசையில் இன்னுமோர் உன்னத வெளியீடு!**

# லிப்கோவின்
# ஹிந்தி — தமிழ் அகராதி

பதிப்பாசிரியர்: சா. ரா. சாரங்கபாணி, எம். ஏ.

(முன்னாள் பொதுச் செயலர், தக்ஷிண பாரத ஹிந்தி பிரசார சபா, சென்னை;
முன்னாள் ஆசிரியர், 'விச்வாத்மா,' புது தில்லி)

* பயனுள்ள அநுபந்தங்களுடன் 464 பக்கங்கள்
* விலை ரூ. 28; ரிஜிஸ்தர் தபாலில் ரூ. 34

**லிப்கோ வெளியீடுகளில் சில:**

(1) இந்தி ஆசிரியன் ரூ. 9; (2) விரத பூஜா விதாநம் ரூ. 10; (3) ஸகல காரிய ஸித்தியும் ஸ்ரீமத் ராமாயண பாராயணமும் ரூ. 16; (4) நாலாயிர திவ்வியப் பிரபந்தம் ரூ. 80; (5) ஸ்ரீரங்க மாஹாத்மியம் ரூ. 8; (6) ஸ்ரீ மஹா பக்த விஜயம் ரூ. 15; (7) ரிஷிகளும் கோத்ரங்களும் ரூ. 6.50. (8) நவக்ரஹ க்ஷேத்ர புராணம் ரூ. 7.20; (9) இயற்கை தரும் இன் மருந்துகள் ரூ. 12; (10) குழந்தை வளர்ப்புக் கலை ரூ. 5.

லிப்கோவின் இலவச முழுப் பட்டியலுக்கு எழுதுக:




**தி லிட்டில் ப்ளவர் கம்பெனி**

43, ரங்கநாதன் தெரு, தபால் பை 1028
தியாகராயநகர், சென்னை — 600 017

போன்: 441538

வைர விழா நோக்கிப் பீடுநடை போடுவோர்!

---

# உங்கள் விரலுக்கு மட்டும் ப்ரஷ் இருந்தால்...

உங்கள் பற்களின் பின்புறத்தையும் நீங்கள் எளிதில் துலக்க முடியும். அங்குதான், சொத்தை, பற்களை முதலில் பாதிக்கிறது. பல டூத்ப்ரஷ்களால் விரலைப்போல் வளைந்து பற்களின் பின்புறத்தை அணுகமுடிவதில்லை. ஆனால் இப்போது வந்துள்ளது புதிய ப்ராமிஸ் 15—முன்னுக்கு 15° வளைந்து புதுமையாகத் தயாரிக்கப்பட்ட டூத்ப்ரஷ். இது சுலபமாக பற்களின் பின்புறத்தையும் துலக்க உதவுகிறது. ஆகவே பல் டாக்டர்கள், இதனை, விஞ்ஞானரீதியாகத் தயாரிக்கப்பட்ட டூத்ப்ரஷ் எனக் கருதுவதில் வியப்பில்லை.







புதிய
**ப்ராமிஸ் 15**
உங்கள் பற்களின்
பின்புறத்தையும்
துலக்கவல்ல டூத்ப்ரஷ்.







CHAITRA-B-BLS-678 TAM

புடன். "இப்பவே காம்பவுண்டைத் தாண்டிக் கூட்டம் வழிகிறது!"

"வேறு வழி இல்லே. பேச்சாளர்களைக் கண்ணால் பார்த்த திருப்தி ஜனங்களுக்கு இருக்கும்."

பொன்னம்பலம் ஏற்பாடுகளைக் கவனிக்கச் சென்று விட்டார். புதிய ஏற்பாட்டைப் பற்றி ஒலிபெருக்கியில் அறிவிப்புகள் ஒலித்தன.

"தமிழ் மக்களே, அமைதியாயிருங்கள்!"

இரண்டு மணி நேரம் தாமதமாக நிகழ்ச்சி ஆரம்பமாயிற்று. பேச்சாளர்கள் அரங்க மேடையில் அமர்ந்தார்கள். யாரோ ஓர் இளைஞனை அமர்க்களமாக வரவேற்று மேடையில் ஏற்றி மாலை அணிவித்தார்கள். அப்பாவின் முகத்தில் கவலை தெரிந்தது.

"யாருப்பா அந்தப் பொடியன்?"

"அவன்தான் ஜனார்த்தனன். அவனை வேன் மேடையேற்றுகிறுங்கள்? தடையுத் தரவு கிடைச்சதாப் பொன்னம்பலம் சொன்னாரே!"

ஜனார்த்தனுக்குப் பெரிய கரகோஷம் கிடைத்தது. நிலை கொள்ளாமல் அப்பா தவிப்பதை ஜயசீலன் கவனித்தான்.

மேடையில் இருந்தவர் ஒருத்தர் ஏதோ சொல்ல ஜனார்த்தனன் இறங்கி மேடைக்குப் பின்னால் சென்று அமர்ந்து கொண்டான். அவனைச் சூழ்ந்து கொண்டு நின்ற கூட்டத்திற்குக் கையெழுத்துப் போட்டுக் கொடுக்க ஆரம்பித்தான்.

நிகழ்ச்சி ஆரம்பித்தது. ஜயசீலன் எழுந்து நின்று தன்னைச் சுற்றிப் பார்த்தான். அடேயப்பா, கண்ணுக்கு எட்டுகிற தொலைவு வரை ஜனத்திரள், வீதியெல்லாம் அடைத்து!

ஆரம்ப அறிமுகப் பேச்சு முடிந்தபின், உற்சாகத்துடன் அறிவிப்புக் கேட்டது.

"தமிழ்நாட்டிலிருந்து வருகை தந்திருக்கும் பெருந்தகைத் தமிழ்ப் பேராசிரியர் டாக்டர் நாயினு முஹம்மது அவர்கள் பேசுவார்கள்!"

பலத்த கரகோஷம் வானைப் பிளந்தது. பேராசிரியர் பேச ஆரம்பித்ததும் கூட்டம் கப்சிப்பென்று வாயை மூடிக் கொண்டது. பேச்சா அது! தேனருவி போல் தோன்றிற்று, ஜயசீலனுக்கு. எத்தனை அழகு வார்த்தைகளில்! எத்தனை சொகுசு நடையில்! மெய்சிலிர்த்துப் போயிற்று! பேச்சுத் துல்லியமாகக் கேட்டது.

ஒரு ஜனசமுத்திரத்தைக் கட்டுக்குள் வைக்க முடியுமா வெறும் பேச்சால்? வார்த்தைகளுக்கு மந்திர சக்தி உண்டா? அப்பாவின் முகத்தில் ஒரு பரவசம் பளபளத்தது. ஏதோ அமானுஷ்ய வசியத்துக்குள் அமிழ்ந்தவன் போல் ஜயசீலன் உணர்ச்சி வசப்பட்டுப் போனான். எழுந்து நின்று தொலை தூரம் பார்வையைப் பதிக்கையில் —

லேசாக அவன் உடல் விறைத்துக்கொண்டது. ரீகல் சினிமாக் கொட்டகைப் பக்கத்தில் இருந்த கும்பலில் ஏதோ சலசலப்புத் தெரிந்தது. காவல் நிலையம் அந்தப் பக்கம் தான் இருந்தது. என்ன காரணம் என்று புரியாமல் கூட்டம் திமுதிமுவென்று முன்னால் நகர்ந்தது. பேச்சாளரின் பேச்சே காதில் விழாமல் குழப்பமான சத்தங்கள் வெளிப்பட்டன. "அமைதியாயிருங்கள்! அமைதியாயிருங்கள்!" என்ற பேச்சாளரின் வேண்டுதல் பலஹீனமாய்... அசம்பாவிதமாய் ஒலித்தது.

அப்பா அவனுடைய கையை அழுத்தமாகப் பிடித்துக் கொண்டார்.

திடீரென்று ஒரு போலீஸ் ஜீப் கூட்டத்தைத் துளைத்துக் கொண்டு வந்தது. அதைத் தொடர்ந்து ஒரு டிரக், ஹெல்மெட் அணிந்த போலீஸ்காரர்களுடன்.

கண்கள் விரிய ஜயசீலன் பார்த்துக் கொண்டிருக்கையில் போலீஸ் தலைகள் வண்டிகளிலிருந்து குதித்தன. கூட்டத்தைக் கண்மண் தெரியாமல் தாக்க ஆரம்பித்தன.

"ஐயோ ஏன் அடிக்கிறாங்க? ஏன்? ஏன்?"

கேள்வி தொண்டையிலேயே நின்றது. ஜனங்கள் தாறுமாறாக ஓடினார்கள். ஒருவர் மேல் ஒருவர் விழுந்து குழந்தைகளின் பெண்களின் ஓலங்களும் அலறல்களுமாகப் போர்க்களம் போல் ஆகிவிட்டது!

பீதியில் ஜயசீலன் உறைந்து போனான். அப்பா அவனுடைய கையை இரும்புப் பிடிபோலப் பிடித்திருந்தார்.

அத்தனை அமளியிலும் பொன்னம்பலத்தின் குரல் கேட்டது.

"குகதாஸன், பையனின் கையை விடாதீர்! இந்தப் பக்கம் வாருங்கள். கூடத்துக்குள் போய்விடலாம்!"

அப்பா முன்னேற முயன்றார். துப்பாக்கி வெடிச் சத்தம் கேட்டது. தொடர்ந்து கண்ணீர்ப் புகை. எதுவுமே கண்ணுக்குத் தெரியவில்லை. ஒரே கூக்குரல். "பயப்படாதே தம்பி, நான் இருக்கேன்!" என்று பொன்னம்பலத்தின் சமாதானம் இசை கேடாய்...

அவர்கள் நின்ற இடத்துக்கு நேர் மேலாய்த் துப்பாக்கி வெடிச் சத்தம் கேட்டது. மேலே ஓடிய மின்சாரக் கம்பி மேல் வெடிபட்டுக் கம்பி கீழே விழ, அப்பா பெரிதாக அலறினார் —

"பொன்னம்பலம்! பொன்னம்பலம்!"

அவனைப் பிடித்திருந்த கை சரேலென்று தளர்ந்தது. அப்பா முன்னால் வெறி பிடித்து ஓடினார்.

மின்சாரக் கம்பி பட்டு வரிசையாக எட்டு ஒன்பது உடல்கள் கீழே விறைத்துக் கிடந்தன.

'நான் இருக்கேன்' என்று ஒரு விநாடிக்கு முன் சொன்ன பொன்னம்பலம் இப்பொழுது மூச்சடங்கிக் கிடந்தார்.

அவர் அருகில் மண்டியிட்டு இருதயம் பிளந்துவிடும் போல் விசித்து விசித்து அழும் அப்பாவைப் பார்க்கப் பார்க்க ஜயசீலனுக்குள் புதிதாக ஒரு கோபம் ஜனித்தது.

(தொடரும்)

காலாண்டுத் தேர்வுக்குப் படிக்க ஆரம்பிக்கும் முன்......

# கோகுலம்

படித்து விடுங்கள்!



## புதிய ஜனாதிபதியின் கதை!

— ஜானகி மணாளன்

## அதிசய மேஜை! தங்கக் கழுதை! மாயக் கைத்தடி!

— ஜெர்மன் தேசக் கதை.



## என் குழந்தைப் பருவம்

— பாண்டிச்சேரி மத்திய பல்கலைக் கழகத் துணைவேந்தர்
டாக்டர் கி. வேங்கடசுப்பிரமணியன்

## பாரதியார் சொன்ன கதைகள்!

16 பக்க வண்ணப் படக்கதை

## சக்கரவர்த்தி அக்பரும் புத்திசாலி பீர்பாலும்



# கோகுலம்

செப்டம்பர்'87 இதழ் பரபரப்பாக இப்போது விற்பனையாகிறது!

கதைகள் :: கவிதைகள் :: அறிவியல் விஷயங்கள் :: சிரிப்பு வெடிகள்

பசும்பொன் மாவட்டக் கலெக்டர் ஆர். கோபாலன் பேட்டி!



* கலெக்டர் கோபாலன்

# "உங்கள் விசிட்டுக்கு நன்றி!"

கல்கி: மானாமதுரையிலுள்ள சிப்காட் தொழிற்பேட்டையில் இன்னும் பல பிளாட்கள் காலியாகவே இருப்பதற்கு என்ன காரணம்?

பசும்பொன் முத்துராமலிங்கம் மாவட்டக் கலெக்டர் ஆர். கோபாலன்: மிகவும் சுறுசுறுப்பாகப் பலரும் தொழில் ஆரம்பிக்க முன் வரவில்லை என்பது உண்மைதான். அதற்காகத்தான் நாங்கள் பலரையும் அழைத்துத் தொழிற்சாலைகளின் முக்கியத்துவத்தையும், ஆரம்பிப்பவர்களுக்கு அரசு எப்படியெல்லாம் உதவக் காத்திருக்கிறது என்பதையும் விளக்குகிறோம். மானா மதுரை சிப்காட்டைப் பொறுத்தவரை மெதுவாகத்தான் தொழிற்பேட்டையாக உருவாகிக் கொண்டிருக்கிறது என்றாலும் உறுதியாக உருவாகிக் கொண்டிருக்கிறது என்பதும் உண்மை.

கல்கி: மானாமதுரையிலுள்ள அரசு மருத்துவமனையில் இரண்டு டாக்டர்கள்தான் இருக்கிறார்கள். அது போதவில்லை என்கிறார்களே?

கலெக்டர்: அங்குள்ள டாக்டர்களுக்கான பணியிடங்களே இரண்டுதான். இரண்டுபேர் போதவில்லை என்ற புகார் இது வரை எங்களுக்கு வரவில்லை.

கல்கி: அந்த மருத்துவமனைக்குக் காம்பவுண்டுச் சுவர் இல்லாதது பெரும் குறையாக இருக்கிறது.

கலெக்டர்: காம்பவுண்டுச் சுவர் கட்டுவதற்கான மதிப்பீடுகள் தயாரிக்கப்பட்டு வருகின்றன.

கல்கி: மானாமதுரையிலிருக்கும் ஆண்டிகுளம் கண்மாயிலேயே குப்பை கூளங்களைக் கொட்டுவதால் சுகாதாரக் கேடு வர வாய்ப்பிருக்கிறதல்லவா?

கலெக்டர்: அவ்வப்போது அகற்றிக் கொண்டுதான் வருகிறோம்.

கல்கி: அவ்வப்போது அகற்றுவதை விட அதில் கொட்டாமலே இருக்க வழி செய்யலாமல்லவா?

கலெக்டர்: நல்ல யோசனைதான். மாற்று இடம் பற்றி யோசிக்கிறோம்.

கல்கி: மானாமதுரை பஸ் ஸ்டாண்டை விரிவுபடுத்துவதில் தாமதம் ஏன்?

கலெக்டர்: இட ஆர்ஜிதம் செய்வதிலுள்ள பிரச்னைதான். விரைவில் செய்யப்படும்.

கல்கி: இப்போது நீங்கள் ஆர்ஜிதம் செய்யப்போவதாகச் சொல்லப்படும் இடம் பஸ் ஸ்டாண்டை ஒட்டியுள்ள ஒக்கூர் வெள்ளையன் செட்டியார் பள்ளியின் விளையாட்டு

மைதானம். பள்ளி நிர்வாகம் அதற்கு எதிர்ப்புத் தெரிவிக்கிறது. இது குறித்து நாங்கள் பள்ளித் தலைமை ஆசிரியரைச் சந்தித்தபோது, இப்போது ஆர்ஜிதம் செய்யப் போவதாகச் சொல்லும் மைதானத்திற்குப் பின்புறமுள்ள இடத்தை ஆர்ஜிதம் செய்து பள்ளிக்குக் கொடுத்தால், இந்த இடத்தைப் பஸ் ஸ்டாண்டுக்குக் கொடுப்பதில் ஆட்சேபணை இல்லை என்றார். அதோடு, அரசுதான் சமாதானத்திற்கே தயாராய் இருப்பதாகத் தெரியவில்லை என்றார்!

கலெக்டர்: விரைவில் ஒரு நல்ல தீர்வு காணப்படும்.

கல்கி: மானாமதுரை வழியாகச் செல்லும் சில பஸ்கள் பஸ் ஸ்டாண்டுக்குள் வராமல் பை-பாஸ் ரோடிலேயே பயணிகளை இறக்கி விட்டு விடுவதால் மிகுந்த சிரமமாகியிருப்பதாகச் சொல்கிறார்கள்.

கலெக்டர்: அவ்வப்போது நடவடிக்கை எடுத்துக் கொண்டுதான் இருக்கிறோம். தொடர்ந்து நடவடிக்கை எடுப்போம்.

கல்கி: மானாமதுரையிலுள்ள ஸ்ரீபிரியா தியேட்டரில் டிக்கெட்டுகளைத் தியேட்டர்க்காரர்களே அதிக விலைக்கு விற்பதாகச் சொல்கிறார்களே?

கலெக்டர்: அதற்காக அந்தத் தியேட்டரின் லைசென்ஸை இரண்டு முறை தற்காலிகமாக நிறுத்தி வைத்துக்கூட நடவடிக்கை எடுத்துள்ளோம். தொடர்ந்து சோதனையிடுகிறோம்.

கல்கி: மானாமதுரை அருகிலுள்ள இடைக்காட்டூரில் குடிநீர் வசதிக்காக, ஊரை ஒட்டி ஓடும் வைகையாற்றில் சுமார் நாற்பதாயிரம் செலவு செய்து தோண்டப்பட்ட கிணறு சும்மாவே கிடக்கிறது. ஏன்?

கலெக்டர்: கவனிக்கிறேன்.

கல்கி: அதே ஊரில் போடப்பட்ட ஆழ் குழாய்க் கிணறு கூடக் கடந்த ஒரு மாத காலமாக கைப்பம்பு ஏதும் பொருத்தப்படாமல் சும்மா கிடக்கிறது.

கலெக்டர்: அது விரைவில் பொருத்தப் பட்டுவிடும்.

கல்கி: இடைக்காட்டூரில் முன்பு நடந்து கொண்டிருந்த நூலகத்தை மூடிவிட்டார்களாம். மறுபடியும் அது திறக்கப்பட வேண்டும் என்கிறார்கள்.

கலெக்டர்: ஆவன செய்கிறேன்.

கல்கி: இடைக்காட்டூர், முத்தனேந்தல் வழியாக மதுரை—சிவகங்கை செல்லும் பஸ் வேண்டும் என்கிறார்கள். மேலும், அங்கு ஒரு வாரச் சந்தை வசதியும் வேண்டும் என்கிறார்கள்.

கலெக்டர்: தேவையான நடவடிக்கைகளை மேற்கொள்கிறேன்.

கல்கி: காடனேரி என்ற ஊரில் சகாயமேரி என்ற பெண்ணிடம், திருமணம் செய்து கொள்வதாக ஆசைகாட்டி—உறுதி யளித்துப் பழகிய அன்னமுத்து என்பவரால் இப்போது அப்பெண் கர்ப்பமாக இருக்கிறாள். ஆனால் அன்னமுத்தோ இப்போது திருமணம் செய்து கொள்ள முடியாது என்கிறார்....

கலெக்டர்: (மாவட்டக் காவல்துறைக் கண்காணிப்பாளர் நந்தபாலனைப் பார்க்க அவர் சொல்கிறார்): அது குறித்து அரசுத் தரப்பு வழக்குரைஞரிடம் ஆலோசனை கேட்டுத் தகுந்த நடவடிக்கை எடுக்க உள்ளோம்.

கல்கி: பாகனேரி என்ற ஊரில் கடந்த 35—ம் ஆண்டில் பாபு ராஜேந்திரபிரசாத் அவர்களால் திறந்து வைக்கப்பட்ட ஹரிஜனக் காலனியிலுள்ள குடிநீர் கிணறு இப்போது கவனிப்பாரின்றிக் கிடக்கிறது!

கலெக்டர்: கவனிக்கிறேன்.

கல்கி: அதே ஊரில் ஹரிஜனங்களுக்கான சுடுகாட்டுப் பாதையும், சுடுகாடும் கொஞ்சம் கொஞ்சமாகத் தனியாரால் ஆக்கிரமிக்கப்பட்டுக் கொண்டே வருகின்றன!

கலெக்டர்: உடனடியாக ஆக்கிரமிப்புக்களை அகற்ற நடவடிக்கை எடுக்கிறோம்.

கல்கி: வ.சூரக்குடி என்னும் ஊரில் மூன்று அடி குழாய்கள் இருந்தும் போதுமான அளவுக்குக் குடிநீர் கிடைக்கவில்லை என்கிறார்கள்.

கலெக்டர்: பிரச்னை இல்லை. ஆழப்படுத்தி விடலாம்.

கல்கி: அதே ஊரில் சூரமகாளியம்மன் கோயில் திருவிழா கோஷ்டிப் பூசலால் நடைபெறாமல் இருப்பது அம்மக்களுக்குப் பெரிய வருத்தமாக இருக்கிறது.

கலெக்டர்: இப்போது அது சமாதானப் படுத்தப்பட்டு விட்டது.

கல்கி: பள்ளத்தூரில் உள்ள நூலகத்தில் புத்தகங்களை அடுக்கிவைப்பதற்கான ஷெல்ப் வசதிகள் கூட போதுமானதாக இல்லை. மேலும் சுமார் எட்டாண்டுகளுக்கு முன்பு சிலரால் அன்பளிப்பாக வழங்கப்பட்ட சுமார் அறுநூறு புத்தகங்கள் இன்னும் நூலகப் புத்தகங்களோடு சேர்க்கப்படாமல் தனியாகவே கட்டி வைக்கப்பட்டிருக்கின்றன!

கலெக்டர்: தேவையான நடவடிக்கைகளை எடுக்கிறேன்.

கல்கி: காரைக்குடியிலுள்ள கோவாபரேடிவ் ஹவுஸ் பில்டிங் சொசைட்டி லிமிடெட், அங்குள்ள சூடாமணிபுரத்தில் நிலம் வாங்கி வீட்டு மனைகள் பிரித்து விற்பதற்கான ஏற்பாடுகள் பூர்த்தியடைந்த நிலையிலும், சுமார் ஐந்தாண்டு காலமாக இன்னும் அதன் உறுப்பினர்களுக்கு வீட்டு மனைகளை ஒப்படைக்கவில்லை! விரைவில் ஒப்படைக்கச் செய்தால் மிகவும் உதவிகரமாய் இருக்கும். என்கிறார்கள்.

கலெக்டர்: கவனித்து ஆவன செய்கிறேன்.

கல்கி: தேவகோட்டையிலுள்ள போலீஸார் குடியிருப்பு மிகவும் பழுதடைந்த நிலையில் உள்ளது. புதுப்பிக்கப்பட வேண்டும்

* கலெக்டர் பேட்டியின் போது உடனிருந்த அதிகாரிகளில் ஒரு பகுதியினர்......



என்கிறார்கள்.

மாவட்ட காவல்துறைக் கண்காணிப்பாளர் நந்தபாலன்: பசும்பொன் மாவட்டத்திலேயே அதுதான் நல்லநிலையில் இருப்பதாக நாங்கள் நினைக்கிறோம். அதையே நீங்கள் இப்படிச் சொல்கிறீர்களா? (சிரிப்பு) ஒதுக்கப்பட்டுள்ள நிதியில் எந்தப் பழுதை முதலில் சரி செய்ய வேண்டுமோ அந்த வரிசையில் சரி செய்து கொண்டுதான் வருகிறோம்!

கல்கி: தேவகோட்டை அருகிலிருக்கும் சண்முகநாதபுரத்திலுள்ள பி.எஸ். சாத்தப்ப செட்டியார் உயர்நிலைப் பள்ளியில் கடந்த ஏழாண்டு காலமாகவே உடற்கல்வி ஆசிரியர் இல்லை. மாணவ, மாணவியரின் மொத்த எண்ணிக்கை நானூற்றைம்பதுக்கு மேல் இருந்தால் இரண்டு உடற்கல்வி ஆசிரியர்களை நியமிக்கலாம். ஆனால் அங்கோ மொத்த எண்ணிக்கை ஐந்நூறுக்கு மேலிருந்தும் ஓர் ஆசிரியர் கூட இல்லை. மேலும் இரண்டு இடைநிலை ஆசிரியர்களும் ஒரு தமிழாசிரியரும் தேவை என்கிறார்கள்.

கலெக்டர்: விதிகளின் படியும், பள்ளிக் கூடங்களின் தேவைகளுக்கு முன்னுரிமைப் படியும் ஆசிரியர்களின் நியமனம் செய்யப்பட்டுக் கொண்டுதான் இருக்கிறது. கவனிக்கிறேன்.

கல்கி: காஞ்சிப்பட்டி என்னும் ஊரிலிருந்து ஒருப்போக்கி என்னும் கிராமம் வரை சுமார் மூன்று கி.மீ. தூரத்திற்குச் சாலைவசதியே இல்லை. இந்நிலையில் இடையில் ஒரு காட்டாறும் குறுக்கிடுவதால் மிகுந்த சிரமப்படுகிறார்கள்!

கலெக்டர்: அதற்குச் சாலையமைக்க வேண்டுமானால் ஐந்து லட்சம் ரூபாய் தேவைப்படும். நிதிவசதி இல்லை. நிதிவசதி கிடைத்ததும் வேலை துவங்கப்படும்.

கல்கி: ஒருப்போக்கி கிராமத்தின் சுற்று வட்டாரத்தில் ஆரம்பப் பள்ளிகள்தான் உள்ளனவே தவிர, நடுநிலைப் பள்ளி கூட இல்லை. அதனாலும், குழந்தைகளுக்குச் சிரமம்!

கலெக்டர்: நடுநிலைப் பள்ளி அமைக்க நடவடிக்கை எடுக்கிறோம்.

கல்கி: அங்குள்ள கிராம ஊருணியும் தனியாரால் ஆக்கிரமிக்கப்பட்டுக் கொண்டே இருக்கிறது.

கலெக்டர்: ஆக்ரமிப்புகளெல்லாம் பாரபட்சமின்றி அகற்றப்படும்.

கல்கி: காளையார் கோயில் அருகிலுள்ள மரவமங்கலம்—சிறியூர் சாலை செப்பனிடப்படாமலும் பஸ் போக்குவரத்து இல்லாமலும் இருப்பதால் உசிலங்குளம், பூதகுடி, சோலையூர், நரங்காளி, ஊரகுடி, குணக்குடை, சிறியூர், தோடுகுளம் என்று பல கிராம மக்களுக்கும் பிரச்னையாக இருக்கிறது.

கலெக்டர்: அதற்கான நில ஆர்ஜிதம் செய்வதில் சில பிரச்னைகளால்தான் தாமதம். விரைவில் சரிசெய்யப்பட்டுவிடும்.

கல்கி: சில இடங்களில் மருதுபாண்டியர் போக்குவரத்து பஸ்ஸுக்கு அடுத்துத் தனியார் பஸ் புறப்படுவதாக இருக்கும். சில டிரைவர்—கண்டக்டர்கள் அந்தத் தனியார் பஸ்காரர்களிடம் பத்தோ பதினைந்தோ வாங்கிக் கொண்டு, புறப்பட வேண்டிய நேரத்திற்கு முன்னதாகவே புறப்பட்டு விடுவதாகப் புகார் சொல்கிறார்கள்.

கலெக்டர்: கண்காணித்து நடவடிக்கை எடுக்கச் செய்கிறோம்.

கல்கி: மேலப்பட்ட மங்கலம் ஊராட்சியிலுள்ள வடக்கு வேழனிப்பட்டியில் குடிநீர் வசதி இல்லை. ஆழ்குழாய்க் கிணறு வசதி கேட்டபோது, அதற்கான உபகரணங்களை எடுத்து வரும் வசதியில்லை என்று சொல்லப்பட்டதாமே?

கலெக்டர்: உடனடியாகக் கவனித்து ஆவன செய்கிறேன்.

கல்கி: காரைக்குடிக்கும் திருப்பத்தூருக்கும் இடையிலுள்ள சிராவயல் என்னும் ஊருக்கு மருதுபாண்டியர் போக்குவரத்துக் கழக பஸ் நான்கு சிங்கிள்தான் வருகிறது. அது போதவில்லை. எனவே, சிராவயல் வழியாகத் திருப்பத்தூர் — காரைக்குடி பஸ்கள் விட வேண்டும் என்கிறார்கள்.

கலெக்டர்: கூட்ட நெரிசலைக் கணக்கில் கொண்டுதான் மேற்கொண்டு பஸ்கள் விட முடியும். ஆய்கிறோம்.

கல்கி: கடந்த 75—ம் ஆண்டு ஐந்து கோடி செலவில் திருப்பத்தூரில் ஒரு ரப்பர் தொழிற்சாலை ஆரம்பிக்கப்படும் என்று அறிவிப்புச் செய்யப்பட்டு, சில கட்டடங்களைக் கட்டியதோடு நின்று விட்டதே?

கலெக்டர்: ஐந்துகோடி என்பது இப்போது இருபது கோடியாக உயர்த்தப்பட்டு விட்டது. கூடிய விரைவில் ஆரம்பிக்கப்படும்.

கல்கி: திருப்பத்தூருக்குக் காரைக்குடியிலுள்ள ஆர்ட்டீஷியன் ஊற்றுக்களிலிருந்து குடிநீர் கொண்டு செல்லும் திட்டமும் செயல்படவில்லை என்கிறார்கள்.

கலெக்டர்: இப்போது கருவேல் குறிச்சியிலிருந்து திருப்பத்தூருக்குக் குடிநீர் கொண்டு செல்லப்படுகிறது. மேலும் பின்

ளையார் பட்டியிலிருந்து கொண்டு செல் வதற்கான ஆய்வுகளும் நடந்து கொண் டுள்ளன. எனவே திருப்பத்தூரில் குடிநீர் பிரச்னை வர வாய்ப்பில்லை.

கல்கி: காரைக்குடி அருகிலுள்ள தமிழ் நாடு கெமிக்கல்ஸ் நிறுவனத்தின் கழிவு நீரால் சுகாதாரக் கேடு உண்டாவதாகச் சொல்கிறார்கள்!

கலெக்டர்: தமிழ் நாடு கெமிக்கல்ஸில் கழிவு நீர்ச் சுத்திகரிப்பு நிலையம் கட்டும் பணிகள் துவங்கப்பட்டு விட்டன.

கல்கி: சத்துரு சங்காரக் கோட்டையில் ஒரு மேல்நிலைக் குடிநீர்த் தொட்டி வேண்டும் என்கிறார்கள்.

கலெக்டர்: இந்த ஆண்டு நிதி ஒதுக்கீட் டில் அங்கு கட்டப்படும்.

கல்கி: சிவகங்கை அருகிலுள்ள துக்கால் என்னும் ஹரிஜனக் கிராமத்திலுள்ள சுமார் நாற்பது குடும்பங்களுக்கு வீட்டு மனைப் பட்டா வழங்கப்பட வேண்டும் என்கிறார்கள்.

கலெக்டர்: இன்னும் ஒரு மாதத்தில் வழங் கப்பட்டு விடும்.

கல்கி: சிவகங்கை ராஜா மேல் நிலைப் பள்ளி என்றாலே 'காப்பி அடிக்கும் சென்டர்' என்று சொல்லும் அளவுக்கு ஆகிவிட்ட தாகப் பலரும் வருத்தப்படுகிறார்கள்.

கலெக்டர்: நடவடிக்கை எடுக்கிறேன்.

கல்கி: சிவகங்கையிலுள்ள தமிழ் நாடு வீட்டு வசதி வாரியக் குடியிருப்பு வீடுகளில், சம்பள அடிப்படையில்தான் ஏ,பி,சி,டி,... என்று பிரிவு படுத்தப்பட்ட வீடுகளை வழங்க வேண்டும். ஆனால் அப்படி வழங்கப்பட வில்லையாமே?

கலெக்டர்: ஆரம்பத்தில் சில அப்படி வழங்கப்பட்டு விட்டதென்பது உண்மை தான். இனிமேல் அப்படி வழங்கப்பட மாட் டாது.

கல்கி: சிவகங்கை அரசு மருத்துவமனையில் சமயத்தில் உயிர் காக்கும் மருந்துகள் இருப் பதில்லை; எக்ஸ்—ரே—பிலிம்கள் இருப்பதில்லை என்று புகார்.

கலெக்டர்: அப்படி யெல்லாம் இருந்த தில்லை. இருப்பினும் அப்படி இல்லாமல் பார்த்துக் கொள்கிறோம்.

கல்கி: இங்குள்ள நூலகத்திலும் சரியான அளவுக்கு புத்தகங்களை அடுக்கி வைக்க ஷெல்ப் வசதிகள் இல்லை. சினிமா தியேட்டர் களிலும் சுகாதார வசதி இல்லை என்கிறார்கள்.

கலெக்டர்: நடவடிக்கை எடுக்கிறேன். சினிமா தியேட்டர்களைப் பொருத்தவரை அவ்வப்போது இன்ஸ்பெக்ட் செய்து கொண் டுதான் உள்ளோம்.

கல்கி: சிவகங்கைக்கு மாற்றலாகி வரும் திருமணமாகாத பெண்கள் தங்குவதற்குஹாஸ் டல் வசதி இல்லாதது பெரும் குறையாக இருப்பதாகச் சொல்கிறார்கள்.



''எங்க கட்சியிலே தலைவரோட வார்த் தைக்குத் தொண்டர்கள் எல்லோரும் கட்டுப்பட்ட வங்கதான்... ஆனா...''

''ஆனா என்ன?''

''யார் தலைவர், யார் தொண்டர்ங்கற விஷயத்துலே தான் கொஞ்சம் தகராறு, அடிதடி...''

—அரகண்டநல்லூர் சாதிக்பாஷா.

கலெக்டர்: உண்மைதான். விரைவில் ஆவன செய்கிறோம்.

கல்கி: கிராபைட் தொழிற்சாலை எப்போது ஆரம்பிக்கப்படும்?

கலெக்டர்: எனக்குத் தெரிந்த வரை விரை வில் ஆரம்பிக்கத் தேவையான நடவடிக் கைகளை அரசு எடுத்துக் கொண்டுதான் வருகிறது.

கல்கி: பசும்பொன் மாவட்டத்தில் சுற்று லாத் தலங்கள் நிறைய உள்ளன. அதை மேம் படுத்திச் சுற்றுலாப் பயணிகளைக் கவரும் திட்டம் உள்ளதா?

கலெக்டர்: பத்து லட்சம் செலவில் பெரிய திட்டம் ஒன்று உள்ளது. பிரான்மலையில் சிறிய மிருகக் காட்சிச் சாலை ஒன்று அமைக் கும் திட்டமும் உள்ளது.

கல்கி: கடைசியாக ஒன்று. மாவட்டத்தி லுள்ள பெரும்பாலான இடங்களையும் சுற்றிப் பார்த்த போது,—பலரையும் சந்தித்த போது —சிலர், 'எங்கள் கலெக்டர்தான் இருபத்து நான்கு மணி நேரமும் கடுமையாக உழைக் கிறார். ஆனால், மற்ற அதிகாரிகளையும் அப்படி உழைக்க வைக்கவில்லை அவர்..' என்று சொன்னார்கள். உண்மைதானா?

கலெக்டர் (சிரிக்கிறார்): அது தவறான தகவல். மற்ற அதிகாரிகளும் என்னோடு நேரம் காலம் பார்க்காமல் உழைப்பதால் தான் மாவட்டத்தின் ஒவ்வொரு மூலையிலு முள்ள பிரச்னையையும் எங்களால் தீர்க்க முடிகிறது. நீங்கள் குறிப்பிட்ட அத்தனை பிரச்னைகளுக்கும் எங்களால் முடிந்தவரை நடவடிக்கைகள் எடுப்போம் என்று மறுபடி யும் உறுதியளிக்கிறேன். பிரச்னைகளைச் சுட்டிக் காட்ட உதவிய உங்கள் விசிட்டுக்கும் நன்றி கூறுகிறேன். வணக்கம்.

# லக்மே ஷாம்ப்பூ

## அனைத்திலும் முதலான ஷாம்ப்பூ+கண்டிஷனர்.

**லட்சக் கணக்கான மகளிர் தங்கள் கூந்தலின் அழகுப் பராமரிப்பிற்கு இது உன்னதம் என்பதைக் கண்டு கொண்டுள்ளனர்.**

7 ஆண்டுகளுக்கு முன்பு, ஷாம்ப்பூ + கண்டிஷனர் எனும் கருத்தை, முதலில் அறிமுகப்படுத்தியது லக்மே.

லட்சக்கணக்கான மகளிர் ஏனைய ஷாம்ப்பூக்களை விட, ஷாம்ப்பூ + கண்டிஷனர் மிகச் சிறந்த இயல்புகள் கொண்டது என்றுணர தொடங்கினர் மிக விரைவிலேயே.

இயற்கைதானே!

ஏனைய ஷாம்ப்பூக்களைப் போலன்றி, லக்மே ஷாம்ப்பூ உள்ள கண்டிஷனர், ஒவ்வொரு முடியிழைக்கும் ஒரு மினுமினுப்பான பூச்சினை அளிக்கிறது. இதனால் கேசம் மிருதுவாக, பட்டுப்போல் ஒளிர்கிறது. கேசத்தைப் படிய வைப்பதும் எளிதாகிறது. எனவே, இந்தியாவின் அதிக விற்பனையுள்ள நம். 1 ஷாம்ப்பூ + கண்டிஷனராக இது வளர்ந்ததில் வியப்பில்லை.

இன்று, லக்மே ஷாம்ப்பூ + கண்டிஷனர் ஏனைய ஷாம்ப்பூக்களை விடச் சிறந்தது மட்டுமல்ல; உங்கள் கேசத்திற்கு முற்றிலும் சிறந்த ஷாம்ப்பூ + கண்டிஷனரும் இதுவே.



# + கண்டிஷனர்.

# அனைத்திலும் சிறந்த ஷாம்ப்பூ+கண்டிஷனர்.

## இது, ஏன் ஏனைய ஷாம்ப்பூ ப்ளஸ் கண்டிஷனரை விட சிறந்தது என்பதற்கு அழகான 4 காரணங்கள்

**1 எல்லா வகை கேசத்திற்கும் உகந்தது.**

கேசம் 4 வகை. சாதாரண கேசம், உலர்ந்த கேசம், எண்ணெய்ப் பசையுள்ள கேசம், போஷாக்கற்ற கேசம். லக்மே ஷாம்ப்பூ + கண்டிஷனர் மட்டுமே எல்லா வகைக் கேசத்திற்கும் 4 வகைகளிலே கிடைக்கிறது.

மேலும், லக்மே மட்டுமே எக் ஷாம்ப்பூ + கண்டிஷனரை வழங்குகிறது.

**2 சரிவிகிதமான கண்டிஷனர்.**

அதிக அளவு கண்டிஷனர் இருக்குமானால், பலமுறை பயன்படுத்தியதும், கேசத்திலே கண்டிஷனர் தங்கிவிடுகிறது. இதனால் கேசம் கனமாக, எண்ணெய்ப் பிசுக்குப் படியாமல் போகிறது.

லக்மே ஷாம்ப்பூ மட்டுமே சரிவிகித கண்டிஷனர் கொண்டது. ஷாம்ப்பூ செய்யச் செய்ய, இது உங்கள் கேசத்தை மிருதுவாகவும், பட்டுப்போலவும், படிந்தும் இருக்கச் செய்கிறது.

**3 உங்கள் கேசத்திற்கு இதமான ஷாம்ப்பூ.**

கடுமையான ஷாம்ப்பூ ப்ளஸ் கண்டிஷனர், உங்கள் கேசம் மற்றும் மண்டை மேல் தோலிலுள்ள இயற்கையான எண்ணெய்களைக் கழுவிக் களைந்து, கேசத்தை உலரச்செய்து, சொரசொரப்பாகச் செய்கிறது.

லக்மே ஷாம்ப்பூ + கண்டிஷனர் மட்டுமே ஒவ்வொரு வகை கேசத்திற்கும் ஏற்றவாறு, மாறுபட்ட அளவு, இதமாகச் சுத்தமாக்கும் பொருள்களடங்கி வருகிறது. இவை உங்கள் கேசத்தின் இயற்கையான எண்ணெய்களை விடுத்து, அழுக்கையும் பிசுபிசுப்பையும் கழுவிக் களைகின்றன.

**4 பணத்திற்கு முழு மதிப்பு.**

ஏனைய ஷாம்ப்பூ ப்ளஸ் கண்டிஷனர்கள், லக்மேயை விட 20% வரை விலை அதிகம்.

லட்சக் கணக்கான மகளிர் கண்டுணர்ந்துள்ளனர்—உண்மையிலேயே லக்மே ஷாம்ப்பூ + கண்டிஷனர் மிகச் சிறந்தது என்று.

நீங்கள்?




## லக்மே

**இந்தியாவின் நெ.1 ஷாம்ப்பூ+கண்டிஷனர். 7 ஆண்டுகளாக.**

Enterprise/LL/145 Tm.A

# "கங்கை — காவிரி இணைப்பு வேண்டும்!"



— குன்றக்குடி அடிகளார் கூறுகிறார்...

"பசும்பொன் மாவட்ட மக்களின் வளர்ச்சிக்கு என்ன செய்ய வேண்டும்? என்று சிந்திப்பதை விட, இந்திய மக்களின் ஒட்டுமொத்த வளர்ச்சிக்கு என்ன செய்ய வேண்டும்- என்று சிந்திப்பதுதான் சரி என்று நான் நினைக்கிறேன். அதில் பசும் பொன் மாவட்டமும் அடக்கம்தானே!

"முதலில் நதிகளைத் தேசிய மயமாக்க வேண்டும். மேற்குத் தொடர்ச்சி மலையிலிருந்து சென்று அரபிக் கடலில் வீணாகும் நீரைத் தமிழகத்தின் தென் மாவட்டங்களுக்குத் திருப்பிவிட வேண்டும். கங்கை — காவிரி இணைப்புத் திட்டத்தை அறிவித்து, மக்களின் சிந்தனைகளை ஒருமுகப்படுத்த வேண்டும். 'நாட்டுக்கு அபாயம் என்று மக்களை திசை திருப்புவதைவிட, 'கங்கை — காவிரி இணைப்புத் திட்டத்தை அறிவித்து மக்களை ஆக்கபூர்வமான அந்த லட்சியத்தில் ஒருமுகப்படுத்த வேண்டும்' என்று அண்மையில் நமது பிரதமருக்குக் கூட நான் தந்தி கொடுத்துள்ளேன்.

"ஏற்கெனவே நமது கிராமங்களில் பற்றாக் குறை. இந்நிலையில் நகரத்தின் நாகரிகத் தாக்கமும் ஏற்பட்டால் என்ன நிகழ முடியும்? மேலும் மேலும் கிராமங்கள் வறுமைக்குத் தான் தள்ளப்படும். அதுதான் இப்போது நடந்து கொண்டிருக்கிறது. கிராமப்புற ஏழ்மையைப் போக்குவதற்குத் தொழிற் சாலைகள் மட்டுமே போதாது. அது நடுத்தர வர்க்கத்தின் பற்றாக்குறையைத்தான் போக்கும். எனவே, வேளாண்மைக்கு முக்கியத்துவம் கொடுக்க வேண்டும். அதற்குத்தான் நதிகளை தேசிய மயமாக்க வேண்டும் என்கிறேன். இதைச் செய்யாதவரை கிராமப்புற ஏழைமை அப்படியேதான் பராமரிக்கப்படும்!

"மேலும் கிராமங்களில் சிறுசிறு தொழிற்சாலைகள் ஆரம்பித்தால் அதற்கான பங்குத் தொகையாக கிராம மக்களிடமிருந்து இருபத்தைந்து சதவிகித மூலதனம் திரட்டப்பட வேண்டும் என்கிறது அரசு. கிராமங்களில் இது சாத்தியமே இல்லை. அதனால் அதைப் பத்து சதவிகிதமாகக் குறைக்க வேண்டும். அதோடு, கிராமங்களில் தொழில்களை ஆரம்பிக்கக் கட்டட வசதிகள் இல்லை. அதை அரசே கட்டிக் கொடுத்து வாடகை வசூல் செய்து கொள்ளலாம். அப்போதுதான் தொழில்களை விரைவாகத் தொடங்க முடியும்.

"பிறகு முற்பட்டோர், பிற்பட்டோர் பட்டியல்களை வெறும் ஜாதி அடிப்படையில்

பிரித்துச் சலுகைகள் வழங்குவதை முதலில் நிறுத்த வேண்டும். அனைவரையும் ஒட்டு மொத்தமாக எடுத்துக் கொண்டு சமூக ரீதியாகப் பின்தங்கியவர்கள், பொருளாதார ரீதியாகப் பின்தங்கியவர்கள் கல்வியில் பின்தங்கியவர்கள் என்று பிரிக்க வேண்டும். இம்மூன்றிலும் பின்தங்கியிருப்பவர்களைத்தான் தாழ்த்தப்பட்டோர் பட்டியலில் சேர்க்க வேண்டும். இந்த அடிப்படையில் சலுகைகள் வழங்கிக் கடைசி மனிதன் வரை அச்சலுகைகள் கிடைக்குமாறு பார்த்துக் கொள்ள வேண்டும். அப்போது தான் ஒரு மூன்று தலைமுறைகளிலாவது அனைவரையும் முன்னேற்ற முடியும். இல்லையெனில், இப்போதுள்ள சலுகைகளை மேலும் மேலும் வளர்ச்சியடைந்தவர்களே தான் அனுபவித்துக் கொண்டிருப்பார்களே தவிர, நியாயமாக அனுபவிக்க வேண்டிய சமூகத்தின் கடைசி மனிதனால் அனுபவிக்க முடியாமலேயே போகும் அபாயம்தான் நீடிக்கும்.

''அப்புறம் வனப்பாதுகாப்பின் அவசியத்தை நமது மக்கள் உணர்ந்ததாகவே தெரியவில்லை. அடிப்படைக் காரணம் என்ன? விண்ணியலுக்கும் கடலியலுக்கும் நமது பல்கலைக் கழகங்கள் கூட முக்கியத்துவம் கொடுத்துப் போதிக்காததுதான் காரணம். வறட்சிக்கான முக்கியக் காரணங்களுள் இந்தப் போதனையின் பற்றுக்குறைதான் தலையாயது. எனவே, இனியாவது அவற்றிற்கு முக்கியத்துவம் கொடுத்துச் சொல்லித் தரப்பட வேண்டும்.

''கடைசியாக, பசும்பொன் மாவட்டத்திலேயே குன்றக்குடிக்குத்தான் நான் அதிக முக்கியத்துவம் கொடுத்துத் தொழில்களை ஆரம்பித்துள்ளேன் என்ற உங்களின் குற்றச்சாட்டு! (சிரிக்கிறார்) 'குன்றக்குடி கிராம நலத்திட்டக் குழு' என்ற குழுவை ஏற்படுத்தியவுடன், குன்றக்குடியை நான் ஒரு சோதனைக்களமாகத்தான் பயன்படுத்தித் தொழில்களைத் துவங்கினேன். அனைத்தும் வெற்றி. அதனால் இப்போது 'பசும்பொன்னில் உள்ள கல்லல், சாக்கோட்டை, கண்ணன்குடி, மானாமதுரை, திருப்புவனம், தேவகோட்டை ஆகிய ஆறு இடங்களிலும் தொழில்களைத் துவங்க உள்ளேன். அரசும் அனுமதி அளித்து விட்டது: (அனுமதிக் கடிதத்தைக் காட்டுகிறார்.) இனி ஆரம்பிக்க வேண்டியதுதான். எனவே உங்கள் குற்றச்சாட்டு உண்மையானதல்ல! (சிரிக்கிறார்).

''நான் மறுபடியும் வலியுறுத்திச் சொல்கிறேன்... கிராமப்புற ஏழைமை போக்கப்பட வேண்டுமானால் வேளாண்மைக்கு முக்கியத்துவம் தந்து, நதிகளைத் தேசிய மயமாக்க வேண்டும். அப்போதுதான் கன்னியாகுமரியிலிருந்து காஷ்மீர் வரை தேசிய உணர்வு பரந்து விரியும்; வளர்ச்சி ஏற்படும். இல்லையெனில், வளர்ச்சி என்பது வெறும் புள்ளி விவரங்களாகத்தான் இருக்க முடியும்!''

சந்திப்பு: நமது நிருபர்கள்



''நம் ஹோட்டல்லே புகார் பெட்டி வச்சது பெரிய தப்பாப் போச்சு!''

''ஏன்?''

''இட்லி, தோசை, வடையெல்லாம் அதுலே கிடக்கு...!''

—அ. தெய்வசிகாமணி



''உங்க பேச்சை அப்படியே டேப் செய்து வச்சிருக்கேன்!''

''பலே! பேஷ்! அடிக்கடி போட்டுக் கேட்பீங்களாக்கும்!''

''ஆமா, இதுவரை நாலுதரம் போட்டுக் கேட்டும் என்னதான் பேசுனீங்கன்னு புரியவே இல்லே!''

— மீனம் தனுசு



''தலைவர், எதிர்காலத்தை நெனச்சு ரொம்பவும் கவலையாக இருக்கார்னு சொல்றீங்களே? என்ன, விஷயம்?''

''ரெண்டு தலைமுறைக்கு வேண்டியதை கஷ்டப்பட்டுச் சேர்த்து வைச்சிட்டாராம்! மூணாவது தலைமுறைக்கு என்ன செய்யறதுன்னு கவலைப்பட்டுக்கிட்டு இருக்கார்!''

—ஆர். அப்துல் சலாம்.



# 4

• இந்திய ஜனநாயகத்தைப் பலப்படுத்திய மூவர்.

"ரயில்வே ஸ்டேஷனுக்குப் போய் டிக்கெட் எடுக்கப் பணம் கொடுக்கிறீர்கள்; அப்போது பயணச் சீட்டு வழங்குகிறவர், 'நான் இப்போது சுதந்திர இந்தியாவுக்குச் சேவை புரிகிறேன்; இந்த மனிதனுக்குத் தேவையானதை நான் உடனே கவனித்து அனுப்ப வேண்டும்' என்ற உணர்வுடன் செயல்பட வேண்டும். நீங்கள் டிக்கெட் வாங்கிக் கொண்டு ரயிலேறும் போது, 'நான் இப்போது சுதந்திர இந்தியாவின் ரயிலில் ஏறியிருக்கிறேன்; எனக்கு உரிய இடத்துக்கு மேல் ஓர் அங்குலம் கூட ஆக்கிரமிக்க மாட்டேன்' என்ற எண்ணத்தோடு செயல்பட வேண்டும். நீங்கள் சாலையில் துப்பினால் சுதந்திர இந்தியாவின் மீது துப்புகிறீர்கள்... நகர சபைகள் முன்னை விடச் சிறப்பாகச் செயல்படுமானால்தான், 'இந்தியா சுதந்திரம் பெறுவதற்காக நாம் சிறை சென்றது சரி' என்ற எண்ணம் எனக்கு ஏற்படும்..."

இவ்வாறு தேசப்பற்று ஊட்டும்விதமாகப் பேசி வந்த கவர்னர் ஜெனரல் ராஜாஜி குறித்துத்தான் 'அவருக்கு மாதம் இருபதாயிரம் ரூபாய் சம்பளம் அவசியமா?' என்ற கேள்வி எழுப்பப்பட்டது! 'பல ஆண்டுகளாகவே காங்கிரஸ், ஏன், அதன் ஓர் அங்கமான ஸி. ஆரும் கூட ஆடம்பரம் கூடாதென்றும் எளிய வாழ்க்கையே சரி என்றும் பிரசாரம் செய்து வரவில்லையா?' என்று கேட்கப்பட்டது!

காங்கிரஸுக்குள்ளேயே இந்தக் கேள்விகள் எழுந்தபோது, நேரு, அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியில் நிலைமையை விளக்கினார். இருபதாயிரம் ரூபாய் சம்பளம் என்பது அந்தப் பதவியின் மேன்மையை உணர்த்த நிர்ணயிக்கப்பட்டதே தவிர, அதில் 13,000 ரூபாய் அரசுக்கே வருமான வரியாகத் திரும்பி வந்துவிடுகிறதென்றும், ஸி. ஆருக்குத் தரப்படுவது வெறும் 7000 ரூபாய்தான் என்றும், அந்த ஏழாயிரத்தில் ஸி. ஆருக்குப் பிடிக்கிறதோ இல்லையோ, கவர்னர் ஜெனரல் என்ற அந்தஸ்தைக் காப்பாற்றிக் கொள்வதற்காக அவர் நிறையச் செலவு செய்ய வேண்டியிருக்கிறது என்றும் எடுத்துச் சொன்னார். ஆயினும், ஸி. ஆரே கவர்னர் ஜெனரலின் சம்பளம்

ராஜாஜி வாழ்க்கை வரலாறு — IV

ராஜ்மோகன் காந்தி

## "கவர்னர்கள் அலங்காரப் பொம்மைகள் அல்ல!"

ரூபாய் 20,000 என்று நிர்ணயிக்கப்பட்டிருப்பது நியாயமல்ல என்று கருதுவதாகவும் அதைக் குறைத்துக் கொள்ள அவரே விரும்புவதாகவும் நேரு தெரிவித்தார். இந்த அ. இ. கா. க. கூட்டத்துக்குப் பிறகு அமைச்சரவை கூடி, 1949 ஜனவரி முதல் கவர்னர் ஜெனரலின் சம்பளம் ரூ. 5,500 என்றும் அதற்கு வருமான வரி கிடையாது என்றும் தீர்மானித்தது. இதே தொகையைத்தான் இந்தியாவின் ஜனாதிபதிக்குத் தரப்பட வேண்டிய சம்பளமாக அரசியல் சாசனத்தில் நிர்ணயிக்கப்படவிருந்தது.

புதிய விதிமுறையினால் யாருமே எதிர்பாராத ஒரு விசித்திர நிலை தோன்றியது. அதனை ஸி. ஆர். மட்டுமே உடனடியாக உணர்ந்தார்! 48 — 49 ஆம் ஆண்டு கணக்கில் வரி போக, ஸி. ஆரின் நிகர வருமானம் கணிசமாக உயர்ந்துவிடும்! முதல் ஆறு மாதங்களுக்கு மட்டுமே வரி செலுத்த வேண்டும். அடுத்த ஆறு மாதங்களுக்கு வரி கிடையாது என்னும் போது, குறைகிற வருவாயை விட மிச்சமாகிற வருமான வரி அதிகமாய் இருக்கும்! இதை நிதி அமைச்சகத்துக்குத் தெரியப்படுத்திய ஸி. ஆர்., பழைய, புதிய ஏற்பாடுகளை இணைத்துப் பார்க்கும் போது நடப்பு ஆண்டில் தமது நிகர வருமானம் எவ்வளவு அதிகமாயிருக்கும் என்பதைக் கணக்குப் போடச் செய்து, அதனை அரசுக்கே திருப்பிக் கொடுத்து விட்டார். அதிகாரிகள், இத்தொகையை ஸி. ஆர். திருப்பித் தர அவசியமில்லை என்றும், எதிர்பாராத வருவாய் என்றாலும் சட்டப்படி இது அவருக்குச் சேர வேண்டிய தொகைதான் என்றும் எடுத்துச் சொன்னார்கள். ஸி. ஆர். இதனை ஏற்கவில்லை.

ஜவாஹர்லால், வல்லபபாய், ஸி. ஆர். ஆகிய மூவரும் இந்திய ஜனநாயகத்தின் மூன்று தூண்களாக விளங்கி அதனைப் பலப்படுத்தினார்கள். காங்கிரஸ் கட்சியும், அரசியல் நிர்ணய சபையும் அரசியல் சாசனத்தில் இடம் பெற வேண்டிய பல்வேறு அம்சங்கள் பற்றித் தீவிரமான விவாதங்கள் நடத்தின. ஆனால் நேரு, வல்லபபாய் ஆகிய இருவருக்குமே ஸி. ஆரின் யோசனைகள் முக்கியமாக இருந்தன. காரணம், எது சரியான பாதை என்பதில் இருவருக்கும் அடிக்கடி அபிப்பிராய பேதம் ஏற்பட்டது. அதனால் ஸி. ஆர். அவ்வப்போது தலையிட்டு, இருவரும் ஏற்கக் கூடியதும் நியாயமானதுமான சமரசத் திட்டங்களை வகுத்து அளித்துக் கொண்டிருந்தார். இதற்கு அந்நாளையத் தலைவர்களின் கடிதங்களிலும் கோப்புக் குறிப்புக்களிலும் ஏராளமான சான்றுகள் நமக்குக் கிடைக்கின்றன.

1949 மே மாதத்தில் கவர்னர்கள் மாநாடு நடந்தது. அதற்கு ஸி. ஆர். தலைமை தாங்கினார். நேருவும் பட்டேலும் பேசினார்கள். மாநாட்டை நிர்வகித்ததே ஸி. ஆர் தான்! நிகழ்ச்சி நிரலை முதலில் வகுத்துப் பிறகு பிரதமரையும் துணைப் பிரதமரையும் ஒருவர் பின் ஒருவராகப் பேச அழைத்தார். அப்புறம் கவர்னர்களைப் பார்த்து, "சீக்கிரமே பத்திரிகை நிருபர்கள் விடை பெறுவார்கள்; அதன் பிறகு மனம் விட்டு நீங்கள் விவாதிக்கலாம்!" என்றார். தொடர்ந்து ஸி. ஆர். பேசினார்:

"நீங்கள் வெறும் அலங்காரத்துக்குத் தான் இருப்பதாகவும் எதையுமே செய்ய முடியாது என்றும் கருத வேண்டாம். நமது பிரதம மந்திரியும் துணைப் பிரதமரும் அத்தகைய கருத்தைக் கொண்டிருக்கவில்லை. உங்களுடைய ஆளுமையை நீங்கள் வளர்த்துக் கொள்ள வேண்டும்; நல்லது செய்ய அதனைப் பயன்படுத்த வேண்டும் என்று தான் எண்ணுகிறார்கள். ஆனால் இதனை உரசலின்றிச் செய்து கொண்டு போவதற்கான வழிகளை நீங்கள் கண்டுபிடித்தாக வேண்டும். ஜனநாயகம் வெற்றிநடை போடுவதற்கு இடைஞ்சலாக நீங்கள் இருந்துவிடக் கூடாது."

ஸி. ஆருக்கும் மற்ற இருவருக்கும் இடையில் உரசல் இல்லாமலும் போகவில்லை. ஒரே ஒரு தடவையேனும் வல்லபபாயிடம் தமது மனம் புண்பட்டுப் போயிருப்பதாக ஸி. ஆர். கூறியிருக்க வேண்டும். பட்டேலின் கடிதம் இதற்குச் சான்று பகர்கிறது:

"எனது கடிதம் மரியாதைக் குறைவாகத் தங்களுக்குத் தோன்றியிருக்குமானால் அதற்காக நான் வருத்தப்படுகிறேன். உங்களையோ அல்லது நீங்கள் வகிக்கின்ற உயர்ந்த பதவியையோ மரியாதைக் குறைவாக நடத்துகிற குற்றத்தைப் புரியும் எண்ணம் எனக்கு இருக்கவே முடியாதுஎன்று நீங்கள் ஒப்புக் கொள்வீர்கள் என்று நம்புகிறேன்."

எந்தப் பிரச்னையானாலும் சரி, 'வாக்கெடுப்பு நடத்தி மக்களின் தீர்ப்பை அறியலாம்' என்ற ஒரே யோசனையைக் கூறும் பழக்கத்தை ஜவாஹர்லால் கொண்டிருந்தார். இதனால் தூண்டப்பட்டு ஓர் அங்கத பாணிப் புதுக்கவிதை எழுதினார் ஸி. ஆர்! தமது படைப்பைப் பார்த்துத் தாமே புன்னகை புரிந்துவிட்டுக் கிழித்துக் குப்பைத் தொட்டியில் போட்டு விட்டார்!

சில சமயம் ஸி. ஆரின் ஒப்புதல் கையெழுத்துக்கு வருபவை அவருக்குப் பிடிக்காத விஷயமாக இருக்கும். "இது அவருக்கு மனச் சங்கடம் அளிக்கும்.. அபூர்வமாகச் சில சமயம் ஸி. ஆர்., மனச்சாட்சிக்கு விரோதமாக..." என்று எழுதி அதன்கீழ் கையெழுத்திட்டதும் உண்டு. இதேபோல, மந்திரி சபையின் ஒரு முடிவை மறுபரிசிலனை செய்யுமாறு கவர்னர் ஜெனரல் திருப்பி அனுப்பினால் நேருவும் பட்டேலும் தர்ம சங்கடத்துடன் நெளிவார்கள். ஆனால் பொதுவாக நோக்குமிடத்து இந்த இரண்டுமே அபூர்வமாக நிகழ்ந்தவைதாம். மேலும், மூவருக்குமிடையே இருந்த நெருக்கமான நட்பும் அதற்கும் மேலாக அன்பும் இதையெல்லாம் தாங்கிக் கொள்ளும் சக்தியை அளித்தன.

(தொடரும்)

# டி.வி. நல்ல பெயர் வாங்கி விட்டதே!

* அர. மணிவண்ணன், சென்னை — 16.

? வெள்ளையனே வெளியேற்ற வேண்டும் என்ற ஒரே கொள்கை மூச்சோடு அனைத்தையும் தியாகம் செய்து, தியாகிகள் வாங்கிக் கொடுத்த சுதந்திரக் கொடியைப் பதவி என்ற ஒரே கொள்கைக்காக வாழும் நாவலர் கோட்டையில் ஏற்றினாரே?

! இன்றைக்குக் கொடியேற்றுகிற அத்தனை பேருக்குமே இது பொருந்தும். எனவே, நாவலரை மட்டும் தனிமைப்படுத்த வேண்டியதில்லை.

* மேலை பழ. நாகப்பன், சென்னை — 41.

? இத்தனை சீக்கிரத்திலேயே — கடந்த ஆகஸ்ட் பதினைந்து அன்று சிந்துபைரவி படத்தை ஒளிபரப்பித் தொலைக்காட்சியினர் நல்ல பெயர் வாங்கி விட்டார்களே?

! மக்களிடம் வேண்டுமானால் நல்ல பெயர் வாங்கியிருக்கலாம்; ஆளுங்கட்சியினரிடம் நிச்சயம் வாங்கியிருக்க முடியாது. அந்தப் படத்தில் சிந்து தன்னை உதறிய தாயாரிடம், 'அம்மா... ஆகஸ்ட் பதினைந்து நினைவிருக்கிறதா? அன்றுதானே நீ என்னை அநாதை. விடுதியில் சேர்த்தாய்...!' என்று ஒரு புதுக்கவிதை போல் கூறுவதில் எவ்வளவு உள்ளர்த்தம் பொதிந்து கிடக்கிறது!

* எல். மாறன், மேல்பட்டி.

? 'ரயில் இஞ்சினையே திருடியவன் தப்பி விடுகிறான்; ஒரு கரித்துண்டைத் திருடியவன் சிக்கிக் கொள்கிறான்' என்று ஒலித்த வசனம் நினைவுக்கு வருகிறதா என்று பேசியிருக்கிறாரே கலைஞர்?

! இஞ்சின் திருடன் என்றும் கரித் திருடன் என்றும் யார் யாரை அவர் மனத்தில் வைத்துக் கொண்டு சொன்னாரோ என்னவோ; எப்படியானாலும் இஞ்சின் திருடியவன் தப்பிவிடுகிறான் என்பதாலேயே கரித்துண்டுத் திருட்டை நியாயப்படுத்த முடியாது.

* கே. பட்டாபிராமன், குடியாத்தம்.

? நாற்பதாவது ஆண்டுச் சுதந்திர தின விழாவை முன்னிட்டுப் புனித மண் சேகரிப்பதிலும், சட்டமன்ற விசேஷக் கூட்டம் கூட்டுவதிலும் மேற்கு வங்க அரசு கலந்து கொள்ளாதது குறித்து?

! மே. வங்க அரசு மட்டுமல்ல; என். டி. ஆர். அரசைத் தவிர, மற்ற எதிர்க்கட்சி அரசுகள் அனைத்துமே புறக்கணித்து விட்டன. காரணம், 'இருபத்தைந்தாவது ஆண்டைக் கொண்டாடலாம். பிறகு ஐம்பதாவது ஆண்டைக் கொண்டாடலாம். அதென்ன நாற்பதாவது ஆண்டுக் கணக்கு? எல்லாம் இப்போதைய சூழல் நெருக்கடியைத் திசை திருப்புவதற்காக மத்திய அரசு கைக்கொண்ட வழிமுறை' என்பதுதான். நியாயம்தானே!

* வெ. நாராயணன், லால்குடி.

? எம். ஜி. ஆர். தமிழ்நாட்டின் நெப்போலியன் என்று வி. வி. சுவாமிநாதன் பேசியுள்ளாரே?

! அப்படியொரு வேடத்தில் எம். ஜி. ஆர். நடித்திருக்கிறாரா, என்ன! எனக்கு நினைவில்லை.

* வண்ணை கணேசன், சென்னை — 11. *

? பிரதமர் முன்னிலையில் என். டி. ஆர்., சிவசங்கர் மோதிக் கொண்டதைக் கவனித்தீர்களா?

! மக்களின் முறையீட்டைப் பிரதமரிடம் சரியானபடி மொழி பெயர்த்துக் கூறவில்லை என்று தாம் கருதுவதை எடுத்துச் சொல்ல முதல்வருக்கு உரிமை உண்டு. இந்நிலையில், 'முட்டாள்தனமாக நடந்து கொள்ளாதே...' என்று என். டி. ஆரைத் திட்ட சிவசங்கருக்கு

• நெப்போலியன்!





• அர்த்தமுள்ள வசனம்.
• பிரபல வரிசை



உரிமை இல்லை. அநாகரிகத்தின் உச்ச கட்டம் அது!

*** எஸ். பிரியதர்சினி, மதுரை — 1.**

**? ரிலையன்ஸ் — 87 உலகக் கிரிக்கெட் போட்டியில் இந்தியாவின் வெற்றி பற்றி உங்கள் கணிப்பு?**

! கிரிக்கெட் என்பது ஜனாதிபதி தேர்தலா என்ன, நடக்கு முன்பே முடிவு தெரிய?

*** எஸ். வெங்கடாசலம், நாட்டரசன் கோட்டை.**

**? 'ஆசிரியராக வேண்டியவன் அமைச்சராகி விட்டேன்' என்று அமைச்சர் டி. ராமசாமி கூறியுள்ளாரே?**

! நல்லவேளையாக மாணவ, மாணவியர் பிழைத்தார்களே, அதைச் சொல்லுங்கள்!

*** பா. சம்பத், திருச்சி — 21.**

**? செய்தி வாசித்துக் கொண்டிருக்கும் போது, இடையில் 'நீங்கள் கேட்டுக் கொண்டிருப்பது ஆல் இந்தியா ரேடியோவின் மாநிலச் செய்திகள்' என்று சொல்லுகிறார்களே, அது ஏன்?**

! ஆளுங்கட்சி ஏற்பாடு செய்த வர்த்தக விளம்பர நிகழ்ச்சி என்று நினைத்துவிடப் போகிறோமோ என்றுதான்!

*** கமலா மாரியப்பன், கோவை — 11.**

**? எங்கள் கோவை கலெக்டர், ஓய்வு பெற்றவர்களுக்கு, மறுநாளே கொடுக்க வேண்டிய எல்லாப் பணத்தையும் கொடுத்து விடுகிறார். கடந்த மூன்று மாதங்களாக நடந்து வரும் நிகழ்ச்சி இது. தெரியுமா?**

! வடாற்காடு மாவட்டக் கலெக்டர் மாலதியும் அப்படித்தான் செய்கிறார்! இப்படி அபூர்வமாகப் பாராட்டு மொழிகள் வந்து காதில் விழும்போது, மனத்துக்கும் செவிக்கும் எத்தனை குளிர்ச்சியாய் இருக்கிறது தெரியுமா?

*** எஸ். ராம்கோபால், சென்னை — 33.**

**? தியாகிகளைக் கௌரவிப்பதற்காகப் புனித மண்ணைச் சேகரித்து வந்து, நமது சட்ட மன்றத்தில் கூட்டப்பட்டிருந்த அனைத்துக் கட்சிகளின் சட்டமன்ற உறுப்பினர் கூட்டத்தை டி. வி. யில் பார்த்த போது, சில உறுப்பினர்கள் தூங்கிக் கொண்டிருந்ததைக் கவனித்தீர்களா?**

! அந்தந்தத் தொகுதி மக்களுக்கு நமது அனுதாபங்கள்! வேறென்ன சொல்ல, இந்த வெட்கக்கேடு பற்றி?

*** வி. கே. வீரசேகரன், விக்கிரபாண்டியம்.**

**? எல்லை காந்திக்குப் பாரத ரத்னு விருது வழங்கப்பட்டது குறித்து?**

! நாற்பதாவது சுதந்திர தினத்தின் போது செய்யப்பட்ட ஒரேயொரு உருப்படியான காரியம் இதுதான். அவர் நினைவுடனிருந்த போதே வழங்கியிருந்தால் இன்னும் சிறப்பாக இருந்திருக்கும்.

*** எம். ஏ. பாஷா, சின்னசேலம்.**

**? இனி கார்த்திக்கையும் பிரபல நடிகர்கள் வரிசையில் சேர்க்கலாமா?**

! தாராளமாக. வண்ணக் கனவுகள் படத்தை நீங்கள் பார்க்கவில்லையா என்ன? சபாஷ் கார்த்திக்!

*** பி. வி. சீனிவாசன், சென்னை — 28.**

**? டி. வி. யில் என் பெயர், உருவம் வர என்ன யோசனை கூறுகிறீர்கள்?**

! காணாமல் போய்ப் பாருங்களேன்!

*** ரூ. 15 பரிசு பெறுபவர்:**

**வண்ணை கணேசன்,**
**18, முனியப்பன் தெரு,**
**சென்னை — 11.**



• வாக்கு
• ...வாதம்..

# சிரிக்கவா முடியும்?

* "பிரபாகரனின் பெருந்தன்மை" என்ற தலையங்கம் என்னைப் பெரிதும் கவர்ந்தது. அதனை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்து இந்தியப் பிரதமர் ராஜீவ் காந்தியின் கவனத்துக்குக் கொண்டு போக வேண்டும்.

ராஜகோபாலபுரம், பி. வி. வடிவேலு

* தலையங்கம் கண்டேன். பிரபாகரனின் பெருந்தன்மையைப் பாராட்டியிருந்த விதம் அருமை! ஆனாலும் 'மத்தியஸ்தம்' செய்யப் போன இந்தியா, விடுதலைப் புலிகளிடம் நேர்மையாக நடக்கவில்லை; நம்பிக்கைத் துரோகம் செய்துவிட்டது' என்ற பொருள்பட எழுதியுள்ளதை என்னால் ஏற்க முடியவில்லை. 'எங்கள் சகோதரர்கள் அங்கு துன்புறுகிறார்கள்; காப்பாற்றுங்கள்' என்று, நாம் பலமாகக் குரல் கொடுத்தோம். மத்திய அரசும், இலங்கைத் தமிழரை நம் மக்களாகவே கருதி, மத்தியஸ்தம் செய்யப் போனது. ஈழத்தமிழர்களைத் தம் மக்களாக எண்ணியதால், 'எம் மக்கள் ஆயுதங்களை ஒப்படைத்து விடுவார்கள். உங்கள் ராணுவத்தை வாபஸ் பெறுங்கள்' என்று இலங்கையிடம் இந்தியா (நம்பிக்கையோடு) சொன்னது. இதில் என்ன தவறு? இதில் என்ன நேர்மைக் குறைவு?

மதுரை — 20, எஸ். ஜே. இனியன்.

* தலையங்கம் கண்டேன். இலங்கை ஒப்பந்தம் செயல்படக் காரணமாக இருந்த பிரபாகரனை மக்கள் கண்டு கொள்ளாமல், தமிழக முதல்வரையும், இந்தியப் பிரதமரையுமே பாராட்டி வந்த இந்நேரத்தில், சிந்தித்துப் பாராட்ட வேண்டியவரைப் பாராட்டி, அறிவுரை கூறி... இப்படி ஒரு தலையங்கமா! தலையங்கம் எழுதுவதில் உம்மை மிஞ்ச இனி ஒருவர் பிறக்க வேண்டும்!

குத்தாலம், எஸ். ராஜா

* "வரலாறு படைப்பாரா வி. பி. சிங்?' — இந்த வார கவர்ஸ்டோரி பிரமாதம்! அதிலும் இந்திரா இருந்த போது, இவர் ஏன் அமைதி கண்டார் என்ற சந்தேகத்தைத் தகர்த்தெறிந்து விட்டீர்கள். பலே; பாராட்டுக்கள்!

கவுந்தப்பாடி, அன்புதாசன்.

* 'சின்னமுட்டம் கடற்கரையில் பெரிய மர்மம்' — கட்டுரை படித்தேன். ஸ்ரீமந் நாராயணசுவாமி கோவிலின் பொறுப்பான மூன்று பேர்களின் நிலை, இறந்தார்களா அல்லது கொலை செய்யப்பட்டார்களா என்ற விவரமே இல்லாமல் போனதும், காவல் துறையினர் காணாமல் போன அந்த மூன்று பேர் விஷயத்தில் இப்படிப் பொறுப்பற்ற முறையில் நடந்து கொண்டதும், ஜீரணிக்க முடியாத அவல வேதனைகள்!

கணபதி, இல. ராஜகோபால்.

* 'சுதந்திரமாகச் சிரிப்போம்' ஜோக்குகளால் என்னிடம் சிரிப்பை வரவழைக்க முடியவில்லை. பதிலாகக் கவலையுடன் இந்தியாவின் எதிர்காலத்தைப் பற்றி யோசிக்க வைத்து விட்டது!"

திருநெல்விக்காவல், டி. திருக்குறள் செல்வன்.

* அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியில் மூன்றும் பரிசு பெற்ற 'அம்மா' சிறுகதை, ஒரு பெண்ணின் மனம் எப்படியெல்லாம் அலை பாய்கிறது என்பதை நன்கு எடுத்துக் காட்டியது. அறிமுக எழுத்தாளரான ஜெயலக்ஷ்மி, ஓர் அனுபவம் மிக்க எழுத்தாளர் போல் இக்கதையை எழுதி இருக்கிறார்!

கோவை — 44, கே. கோபிநாத்.

* வீணைக் கலைஞர் கே. பி. சிவானந்தம் கூறியுள்ளது போல் பரீட்சை என்ற பெயரில் பாடச் சொல்லி, மார்க் போடுவதற்குப் பதில், கச்சேரியில் பாடச் சொல்லித் தேர்ச்சியைக் கணிப்பதுதான் சரியாக இருக்கும். இசைக் கலையும் வளருவதற்கு வாய்ப்பாக இருக்கும்!

நாட்டரசன்கோட்டை, எஸ். வெங்கடாசலம்.

* 19.7.87 இதழில் 'ருஷ்ய மனங்களில் அரங்கேறிய இந்திய விழா' கட்டுரை படித்தேன். துவக்க நாளில் என்னுடைய நிகழ்ச்சி நன்றாயிருந்தது அல்லது இல்லை என்று கூற விமர்சகருக்கு உரிமை உண்டு. ஆனால் துவக்க நாள் நிகழ்ச்சியிலேயே மங்களம் பாடுவது போல, பவமான பாடியதில் குறை கண்டு எழுதியிருக்கிறார். முதல் நாள் துவக்க விழா நிகழ்ச்சிகள் யாவும் முடிந்து, இரண்டு தலைவர்களும் அரங்கை விட்டுப் போகும் முன், அன்றைய நிகழ்ச்சிகள் முடிந்ததற்கு அறிகுறியாகவே மங்களம் பாடப்பட்டது. அதில் 'ராஜீவ நயன' என்று நிரவல் செய்தது காக்காய் பிடிப்பது போல் தோன்றியதாகக் கூறியது உள் நோக்கம் கற்பிக்கின்ற தரக்குறைவான வரிகள். முதலில் இந்த நிகழ்ச்சி நிராகரிக்கப்படவும் இல்லை. பிறகு 'சிபாரிசினால்' சேர்த்துக் கொள்ளப்படவுமில்லை. நடன நிகழ்ச்சியை அமைத்த நான், ஆரம்பத்திலிருந்தே இந்தியக் கலைவிழாவின் அமைப்பாளராகப் பணிபுரிய நியமிக்கப்பட்டவள்.

சென்னை — 90, சந்திரலேகா

* நீங்கள் என்னதான் சொன்னாலும், மங்கை ஒரு கங்கையில் சரிதாவின் நடிப்பு நெஞ்சைத் தொடுகிறது. நதியா, சரிதா மோதிக் கொள்ளும் கோர்ட் காட்சிகள் நல்ல கலகலப்பு!

கும்பகோணம், டி. எஸ். சீதாராமன்.

பரதன் அச்சகத்தில் அச்சிட்டவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிட்டவர் வி. வைத்தியநாதன். ஆசிரியர்: கி. ராஜேந்திரன்.
நிர்வாகக் காரியாலயம்: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை—600 032. போன்: 431543 434157.
ஆசிரியர் குழு அலுவலகம்: 28, ஐந்தாவது தெரு, ஏரி வட்டம், நுங்கம்பாக்கம், சென்னை—600 034. போன்: 473389.

REGISTERED No. M 4392
Registered as a Newspaper in Sri Lanka



**"என் மகளுக்கு கேர்ஃப்ரீ வாங்கித்தர நான் முடிவுசெய்தது ஏனென்றால்."**

அந்த நாட்கள் எனக்கு இன்றும் நினைவிருக்கு. அப்போது எனக்கு என் மகள் வயதிருக்கும். மாதத்தில் அந்த 5 நாட்களை எத்தனை கடினமாக கடந்தேன்... சங்கடம். தொல்லை. சிரமம். அதைவிட மோசம் என்னவென்றால் எங்கள் காலத்தில் வீட்டுத் தயாரிப்புகளையே உபயோகித்தோம். அது தர்மசங்கடமாயிருக்கும். அதைத் துவைத்து காயப் போட்டு போதும் போதும் என்றாகிவிடும். ஆனால், இப்போது காலம் மாறிவிட்டது.

நான் வாழ்ந்த காலம் வேறு. அதிலிருந்து முற்றிலும் மாறுபட்ட காலத்தில் வாழ்கிறாள் என் மகள். இக்காலப் பெண்கள் மாதத்தின் அந்த 5 நாட்களில் கூட மிகத் துடிப்போடு செயல்பட வேண்டியுள்ளது. எங்கள் காலத்தை விட இப்போது மாறிவரும் உலகிற்கேற்ப பன்மடங்கு சுறுசுறுப்புடன் இயங்க வேண்டியுள்ளது. ஆகவேதான், என் மகளுக்கு நான் கேர்ஃப்ரீ தேர்ந்தெடுத்தேன். காரணம், நான் இளம் பெண்ணாக இருந்தபோது அனுபவப்பட்டதைப் போல், என் மகளும் சிரம்ப்படக் கூடாதல்லவா.

முக்கியமான அம்சம் என்னவென்றால் கேர்ஃப்ரீ ஒரு ரெடிமேட் நாப்கின். நான் அந்தக் காலத்தில் செய்தது போல் என் மகள் துவைத்துக் காயப் போட்டு சங்கடப்பட வேண்டியதில்லை. தேவையானபோது ஒவ்வொரு முறையும் புத்தம் புதிய சுத்தமான ஒரு நாப்கினை எடுத்து அவள் உபயோகிக்கலாம். ஒரு தாயாகிய எனக்கு எது முக்கியம் என்றால், கேர்ஃப்ரீ மிகமிக சுகாதாரமானது என்பதுதான்.

**உலர்வும் சுகமும்**

அது, கனமில்லாமல் மெல்லியதாக அடக்கமாக இருந்தாலும் என் மகளுக்கு தேவையான பாதுகாப்பைத் தருகிறது. மாத விலக்கை நாப்கினுள் விரைவாக உறிஞ்சிக் கொள்ளக்கூடிய அது, நன்கு அதிகம் உறிஞ்சும் அடுக்குகள் கொண்டது. அது எப்போதுமே உலர்வான உணர்வோடும் வசதியாகவும் வைத்துக் கொள்வதாக என் மகளே கூறுகிறாள். அது மட்டுமா, கேர்ஃப்ரீ எக்ஸ்ட்ரா லார்ஜும் (கூடுதலான பெரிய நாப்கின்) உள்ளது.

நீண்ட, அகன்ற, துடிப்பான கேர்ஃப்ரீ எக்ஸ்ட்ரா லார்ஜ், அவளுக்கு கூடுதல் பாதுகாப்பையும் பத்திரமான உணர்வையும் அளிக்கிறது— அந்த சங்கடமான நாட்களில் அல்லது அவளுக்கு



அது தேவைப்பட்டபோது.

கேர்ஃப்ரீ உபயோகிப்பதால் வெளியில் சென்று சுற்றி வந்தாலும்கூட அவள் பாதுகாப்பாகவும், பத்திரமாகவும் உணர்கிறாள்.

ஆகவேதான், எங்கள் காலத்தில் கிடைக்காத ஒன்றை என் மகளுக்குத் தர முடிவதை எண்ணி பூரிப்படைகிறேன்... அதுதான் கேர்ஃப்ரீ வசதி...கேர்ஃப்ரீ பாதுகாப்பு. மாறிவரும் காலத்தோடு நாமும் மாற வேண்டாமா!

---

கேர்ஃப்ரீ சானிட்டரி நாப்கின் - இன்றைய மாறிவரும் உலகிற்கேற்ற நாகரிகமான சுகம், நம்பகமான பாதுகாப்பு

---




10 உள்ள பேக்கிலும் சிக்கனமிக்க 20 மற்றும் 30 உள்ள பேக்கிலும் கிடைக்கிறது

**கேர்ஃப்ரீ. காரணம், காலம் மாறுவதற்கேற்ப அவளும் மாறுகிறாள்.**

ஜான்ஸன் அண்ட் ஜான்ஸன்

OBM/9072/TAM